கடுக்குமென் னெஞ்சங் கனவினா லென்கை
பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம்
பட்ட பதியிற் படாத தொருவார்த்தை
யிட்டன ரூரா ரிடுதேளிட் டென்றன்மேற்
கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன் காவலனோ
டூர்க்குற்ற தீங்குமொன் றுண்டா லுரையாடேன்
தீக்குற்றம் போலுஞ் செறிதொடீஇ தீக்குற்ற
முற்றேனோ டுற்ற வுறவனோ டியானுற்ற
நற்றிறங் கேட்கி னகையாகும் பொற்றொடீஇ
கைத்தாயு மல்லை கணவற் கொருநோன்பு
பொய்த்தாய் * பழம்பிறப்பிற் போய்க்கெடுக வுய்த்துக்
கடலொடு காவிரி † சென்றலைக்கு முன்றின்

௪௫. கடுக்கும் - ஐயுறும். கனவினால் - கனவினிடத்து.

௪௬. பிடித்தனன்போய் - பிடித்துப்போக. போய்ப்பட்டேமென்று இருவர் தொழிலுமாம்.

௪௭. இடுதேளிட்டு - தேள்கொட்டப்படுவார் காணாமல் தேளல்லாத தொன்றை மறைய மேலே போகட்டுப் பயப்படப்பண்ணுதல்; தேளென்று பொய்யே யொன்றை இட்டாலொப்ப.

௪௮. கோவலற்குற்றதென்றது, பழிமொழியாதலால்.

௪௮ - ௯. என்றன்மேற் கோவலற்கு உற்றதோர்தீங்கென்று சொல்ல; சொல்லவென ஒருசொல் வருவிக்க.

௫௦ - ௫௧. காவலனோடூர்க்குற்றதீங்குமொன்றுண்டால் - காவலன்பாடும் ஊர்தீப்பாடும் உண்டாகையால். உரையாடேன் - பொல்லாக் கனவாதலால் உனக்குச்சொல்லேன்; [1] "உரையா, ரிழிதக்க காணிற் கனா" என்றாராதலின்.

௫௨. தீக்குற்றம் - கொடியகுற்றம்; அஃதாவது மூலைதிருகியெறிதல்.

௫௩. உறவன் - மிக்கோன்; என்றது கோவலனை.

௫௪. நற்றிறம் - இருவரும் தேவலோகம்புகுதவுள்ள நன்மை. நகையாகுமென்றான், அதன்மிகுதிநினைந்து. எனவென ஒருசொல்வருவிக்க.

௫௫. கைத்தல் - அவனால் வெறுக்கப்படுதல்.

௫௬. உய்த்து - நீரையுய்த்து.

௪௪ - ௫௬. என்றது: நீசொன்னபடியே கூட்டம்பெறுவேன்; ஆயினும் இரையுமுண்டு, கண்டகனவாலேயென்று கண்ணகிசொல்ல, நீகண்டகனக் கொண்டு வருந்தவேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை.

[1] பழமொழி, ௪௮௨. (பி - ம்.) * 'மறுபிறப்பிற்' † 'நின்றலைக்கும்'

மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய * குண்டந் துறைமூழ்கிக்
௬௰ காமவேள் கோட்டந் தொழுதார் † கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொருநா
‡ ளாடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள்
§ பீடன் றெனவிருந்த பின்னரே நீடிய
௬௫ காவலன் போலுங் கடைத்தலையான் வந்துநங்
கோவல னென்றாளோர் குற்றிளையாள் கோவலனும்
பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் || டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
௭௰ குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
[1] இலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன

௫௮ - ௯. சோமகுண்டமும் சூரியகுண்டமுமென்னும் பேரையுடையன; முற்று.

௫௯ - ௬௨. முற்பிறப்பிற் கணவன்காரணமாக ஒருநோன்பு தப்பினும்; அதற்குப் பரிகாரமாவது இந்தக்குண்டம் படிந்தாடிக் கோட்டந்தொழுதல்; தொழுவார் கணவரொடுகூடி இன்புறுவரென்றுசொல்ல, கண்ணகியும்.

௬௪. பீடன்றெனவிருந்த பின்னர் - குலத்திற்பிறந்தார்க்குப் பெருமையன்றென இருந்தகாலை.

௬௫ - ௬. காவலன்போலுங் கோவலன் கடையிடத்தானென்று மாறியுரைக்க; அன்றித் தூரத்தே பார்த்து ஐயுற்று நங்காவலன்போலுமென்று அவன் அணுகினவிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றாளெனினுமாம்; கோவலன்வந்து நங்கடைத்தலையான்; அவன்றான் நெடுங்காலம் நம்மை நீங்காக் குறிப்பினையுடையனென்றாளெனினுமமையும்.

௬௬ - ௭. இலதிகூறுதலும் கோவலன் உட்புகுந்து.

(௪) கொடியிடையார்தாம் கோலங்கொள்ளாநிற்க, அக்காலத்தே (௬௬) கோவலன் (௬௭) பாடமைசேக்கையுட்புக்கென்க.

௬௯. சலம் - பொய். சலதி - பொய்ச்சி. ஆடி - அனுபவித்து.

௭௦. குலந்தருவான்பொருள் - தாயத்தாரால் தரப்பட்டபொருள்.

௭௧. இலம்பாடு - வறுமை.

[1] தொல். புள்ளி. சூ. உக - ந; டிை உரிச். சூ. ௬௨ - ந; இ - வி. சூ. ௬௭௬, உ௮௬ - உரை, மேற்.

* (பி - ம்.) 'குண்டத்துறை' † 'கணவனொடு' ‡ 'ஆடுதுமோவென்ற' § 'பீடன்றெனவுரைத்தபின்னரே' || 'யாதும்'

நலங்கேழ் முறுவ னகைமுகங் காட்டிச்
* சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோ
† டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னோடிங்
கேடலர் கோதா ‡ யெழுகென்று நீடி
வினைகடைக் கூட்ட வியங் § கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சியா முன்.

## வெண்பா.

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை || வறிதாக்க—மூதை
வினைகடைக் கூட்ட வியங் ¶ கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சியா முன்.

௭௨. நகை - ஒளி.

௭௪. சிலம்பு முதலாகவென்றான், வாணிகஞ்செய்வதற்கு; முதலிடென்பராகலான். சென்ற கலன் - முன்பு வாங்கியழித்த ஆபரணம்.

௭௫. உலந்தபொருள் - கெட்டபொருள்.

(௭௬) மதுரையிடத்துச்சென்று (௭௫) ஈட்டுதலுற்றேனென்க.

௭௭. நீடி - நெடுங்காலநின்று.

௭௮. வியங்கொண்டான் - வினையினது ஏவலைக் கொண்டான்.

௭௭ - ௮. எழுகென்று வியங்கொண்டானென்க.

௭௮ - ௯. கங்குலை இடத்துநின்றும் சுடர் போக்குவதன் முன்னென்க; என்றது, இருளைப்போதல்பற்றி.

"காதலிகண்ட" மாதவிதன்சொல்லை வறிதாக்கவென்றது, வேனிற்காதையிற் [1] 'காலைகாண்குவம்' என்றவார்த்தையை. மூர்தை மூதையாயிற்று.

[1] சிலப்பதிகாரம், அ. ௧௧௧.

(பி - ம்.) * 'சிலம்புகொண் மோவெனச் சேயிழைகேளிந்தச் சிலம்பு' † 'உலந்த பெரும்பொருளீட்டித்தேன்' ‡ 'எழுகென்னமூதை' § 'கொண்டார்' || 'வறிதாக்கி', ¶ 'கொண்டார்'

க - ச. அகனகர்.........தாங்கொள்ள

(இ - ள்.) கொடியிடையார், அகன்ற மனையிடமெங்கும் கதிரோன்மறைந்த மாலைக்காலத்தே அரும்பு புரிநெகிழ்ந்த முல்லையினது ஒளிமலரை நெல்லோடே தூவி இல்லுறைதெய்வத்தை வணங்கி மாணிக்கவிளக்கை மைவிளக்கோடே எடுத்து அம்மாலைக்காலத்தே இராப்பொழுதுக்கு ஆம்படி கொழுநர்மார்பைத் தமது முலையாற் பொருந்துதற்கேற்ற கோலங்களைக் கொள்ளாநிற்பவென்க.

என்றது, மகரக்குழைமுதலிய மணியும் பூணும் மதாணியுமுதலிய அணியும் இரட்டையங்கண்ணி பிணையன்முதலிய பணியுங்களைந்து நொய்யனவே புனைந்தும் பூண்டும் முடித்துஞ்செய்தல். அகனகர் - பட்டினப்பாக்கமெனினுமமையும். நிகர் - ஒளி; [1] "நீர்வார் நிகர்மலர் கடுப்ப" என்றார் குறுந்தொகையினும். பகல், ஆகுபெயர். மாய்தல் - மறைதல்; [2] "களிறுமாய்க்குங் கதிர்க்கழனி" என்றாற்போல. மணிவிளக்கம், உம்மைத்தொகை; இருபெயர்க்கண்வந்தது; மணி - அழகுமாம். கோலம் - ஒப்பனை; தமது கொழுநரோடெதிர்க்கும் போர்க்கோலமுமாயிற்று. தாம் - அங்ஙனம் தூவியமகளிர்தாம். [3] "நெல்லுமலருந் தூஉய்க் கைதொழுது, மல்ல லாவண மாலை யயர" என்றார் நெடுநல்வாடையினும்.

ரு - கூ. மேலோர்நாள்...........பாலகன் றன்சோர

(இ - ள்.) முன்னொருநாளிலே மாலதியென்பாள் ஒருபார்ப்பனி தனது மாற்றாள் குழவிக்குத் தன்முலைசுரந்தபாலைச் சங்காலூட்ட அப்பால் விக்குதலாலே தன் கையிலே அக்குழவி மரிக்கவென்க.

பால் - அன்பாலுமாம். பாலகனென்பது காலவழுக்கு. சோர்தல்-மரித்தல்.

கூ - அ. மாலதியும்...........மகக்கொண்டு

(இ - ள்.) அங்ஙனம் பாலகன் மரித்தலானே, அம்மாலதியும் பார்ப்பானும் அவன்மனைவியும் என்மேல் அடாப்பழிகூறுதலொழிந்து ஏற்பனகூறுாதலால் இதற்கு என்செய்கேனென்றேங்கி அம்மகவைக்கொண்டென்க.

உம்மை, இழிவுசிறப்பு. ஒடு, எண்ணொடு. படாதன - அடாதன. விட்டு - ஒழிந்து.

கூ. அமரர்தருக்கோட்டம்—(இ - ள்.) தேவர்தரு நிற்குங்கோயில்,

வெள்யானைக்கோட்டம்—(இ - ள்.) ஐராவதநிற்குங்கோயில்,

க0. புகர்வெள்ளைநாகர்தம் கோட்டம்—(இ - ள்.) அழகினையுடைய பலதேவர்கோயில்,

புகர் - அழகு. வெள்ளைநாகர் - பலதேவர்.

[1] இத்தவாக்கியம், அகநானூறு, கக - ஆம் பாடலில் கஉ - ஆம் அடியாகவும் காணப்படுகின்றது.

[2] மதுரைக்காஞ்சி, உசஎ. [3] நெடுநல்வாடை, சஉ - ச.

௧௦ - ௧௧. பகல்வாயி லுச்சிக்கிழான்கோட்டம்— (இ - ள்.) கீழ்த் திசையிற்றோற்றுகின்ற சூரியன்கோயில்,

பகல்வாயில் - பகற்றோற்றுகிறவாயில்; அவது கீழ்த்திசை. உச்சிக்கிழான் - பகற்பொழுதிற்குரியோன்; இனிப் பகற்பொழுதிற்கு வருவாயாயுள்ளவனென்றுமாம்; சூரியன்கோயிலென்றபடி.

௧௧. ஊர்க்கோட்டம்—(இ - ள்.) இறைவனூராகிய கைலாயத்திற்குங் கோயில்,

வேற்கோட்டம்—(இ - ள்.) முருகவேளிற்குங்கோயில்,

வேல், ஆகுபெயர்.

௧௨. வச்சிரக் கோட்டம்—(இ - ள்.) வச்சிரப்படையிற்குங்கோயில்,

[1] புறம்பணையான் வாழ்கோட்டம்—(இ-ள்.) சாதவாகனன்கோயில்,

புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்று; [2] "புறம்பணை யியம்பு மோசை" என்றார் சிந்தாமணியினும்.

௧௩. நிக்கந்தக் கோட்டம்—(இ - ள்.) அருகன்கோயில்,

என்னை? "நக்கர் நடைக்குந் தகைநற காட்சிய, நிக்கந்த வேடத் திருடி கணங்களை, யொக்க வடிவீழ்ந் தலங்கியல் செய்தபி, னக்கதை யாழ்கொண் டமர வரப் பண்ணி" என்றார் வளையாபதியினும்.

நிலாக்கோட்டம்—(இ - ள்.) சந்திரன்கோயில்,

இவை செவ்வெண்.

புக்கெங்கும்—(இ - ள்.) இக்கூறிய கோயில்களெங்கும்புகுந்து,

௧௪ - ௭. தேவிர்காள்........பாடு கிடந்தாளுக்கு

(இ - ள்.) இங்ஙனம் எங்கும்புக்கவள், தெய்வங்களே! எமது மிக்க இந்நோயைத் தீர்மினென்று இரப்பவும் ஒருவரும் தீராமையின் ஆண்டுப் பொருந்தாது போந்து ஈண்டுச்சாத்தனிடத்தேபொருந்தி அவன்பால் வரங்கிடந்தாளையென்க.

தேவும் தெய்வத்திற்கொருபெயர்; [3] "தேவாதி தேவ னவன்சேவடி" என்றாகலின். தேவிர்: இர் முன்னிலைப்பன்மை. தீர்மென்று, ஈற்றுமிசையுகரம் கெட்டது. [4] பாசண்டம் - தொண்ணூற்றறுவகைச் சமய சாத்திரத்தருக்கக் கோவை; என்னை? "பண்ணுற் றிறத்திற் பழுதின்றி மேம்பட்ட, தொண்ணூற்

[1] "குமரிப் பருவத்தே கோதை புனைந்த, இமெழுத்தப் பூத விருட்டப்-படமெழுத்தம், புன்னை பரும்பும் புகாஅர்ப் புறம்பணையாய்க், கென்ன முறைய கிவன்" என்னும் பழஞ் செய்யுளின்பொருள் (தொல். செய். சூ. ௧௧௮ - உரை, மேற்.) என்றே அறியற்பாலது.

[2] சீவகசிந்தாமணி, அ௫. [3] சீவகசிந்தாமணி, ௧.

[4] "பாசண்டத் துறைபு மிவற்றுட் பலவாம், பேசிற் றொண்ணூற் றறுவகைப் பகுதியே" திவாகரம், ௯ - வது.

றறுவகைச் சோலையும் வல்லவன், விண்ணு றியங்கும் விறலவ ராயினும், கண்ணுறி நோக்கிக் கடுநகை செய்வான்" என்றார் வினயபதியிலுமாகலின் இவற்றிற்குமுதலாயுள்ள சாத்திரங்களைப் பயின்றவனாதலின், * மகாசாத்திரனென்பது அவற்குப் பெயராயிற்று. சாத்தற்கு, உருபுமயக்கம்; இது, [1] "மனைத்தீன்ற" என்றாற்போலன்றது. கிடந்தானுக்கு - கிடந்தானை; இயல்புமாம். இப்பொருட்கு ஆசிலாயென்றசொல்லியென ஒருசொல் வருவிக்க.

கக - உஉ. ஏசும்படியோர்..........மகவை

(இ - ள்) சுடுகாட்டுக்கோட்டத்து இடுபிணந்தின்னும் இடாகினிப்பேய் ஏசும்படி ஓரிளங்கொடியாய்த் தூங்கிருளிற்சென்று அங்குப் பாடுகிடந்தானை நோக்கி ஒன்றினும் குற்றமற்றவனே, கேளாய்; முற்பவத்தில் தவஞ்செய்யாதோர்க்குத் தேவரும் வரங்கொடார்; ஈது பொய்யன்று; மெய்யெனச்சொல்லி அங்ஙனம்பட்ட நின் பிள்ளைப்பிணத்தைப்பார்க்கத் தருகாவெனச்சொல்லாநின்று பறித்து அவன்வாங்கி மடியகத்திட்டாளென்க.

ஏசல் - பழித்தல். படி - வடிவு; பிறரைப்பழிக்கும் வடிவையுடையதொரு பெண்வடிவுமாம். சுடுகாட்டுக்கோட்டம் - [2] சக்கரவாளக்கோட்டம். தூங்கிருள்-செறிந்தவிருள்; யாவரும் அஞ்சுமிருளுமாம். இடுபிணம் - குழியிலிடுபிணம். மடி - வயிறு; [3] "படியை மடியகத் திட்டான்" என்பதனாலுமுணர்க. மடியகத்திட்டாள் - விழுங்கினள். மக, [4] "குழவியு மகவு மாயிரண் டல்லவை, கிழவ வல்ல மக்கட் கண்ணே" என்பதனாற் கூறப்பட்டது; பாலகனென்பது காலவழக்கு.

உஉ - அ. இடியுண்ட.... .....தையலாள்

(இ - ள்.) இடிக்குரல்கேட்ட மயில் அகவுமாபோல ஏங்கியழுகின்ற தையலாளுக்கு அச்சாத்தன் அன்னாய், நீசெல்கின்ற வழிமுன்னர்ப் பொதும்பரிடத்து உயிரோடுகிடக்கின்ற குழவியைக் காண்கின்றிலையோவென, அவன் அது செய்ய ஏங்கி அழுகின்றாய்! அழாதொழியென்று தான் அக்குழவியாய் அவ்விடத்துச்சென்று கிடப்ப, அவள் வஞ்சக்குழவியை ஐயமின்றித் தன்குழவியென்றெடுத்து வயிற்றிலே அணைத்துக் கொடுபோய்த் தாய்கையிற் கொடுத்தாள்; அங்ஙனம் ஏங்கியழுத அத்தையலாளென்க.

அடிக்கப்பட்டதனை அடியுண்டதென்றாற்போல இடிக்கப்பட்டதனை இடியுண்டதென்றார்; உண்டல் - உறுதல்.

உஅ - ௩உ. தூய...........மேயநாள்

(இ - ள்.) அக்குழவியாய இறையோனும் இருமாபுந்தூயமறையோனுக்கும் பின்செல்லும்பிள்ளையாய் மிக்க கல்விகளையும் அவற்றின் பொருட்கேள்விகளையும் கற்றும் தரித்தும் அறைபோய்த் தந்தைதாயிறந்தபின்னர் அவர்க்கு

[1] அகநானூறு, உகஉ.

[2] இது காவிரிப்பூம்பட்டினத்திற் பண்டைக்காலத்து மயனால் நிருமிக்கப்பட்டது; இதன்வரலாற்றை மணிமேகலை, ஆறுவது காதையிற்காண்க.

[3] நான்மணிக்கடிகை, கடவுள்வாழ்த்து, உ. [4] தொல்காப்பியம், மரபியல், சூ. உக. (பி - ம்.) * 'மகாசாத்தனென்பது.'

நீர்க்கடன் முதலியவுஞ்செய்து தன்றாயத்தாரோடும் [1] வெவ்வழக்குரைத்து வட்டியாண்டு தன் மனைவியோடே கூடி நடந்தபின் ஒருநாளிலென்க.

வான்பொருட்கேள்வி-மறைநூலும் அங்கமும். துறைபோதல் - [2] அதற்குத் தனிற்றல். மாணியாயெனவே சௌளமும் உபநயனமும், துறைபோயெனவே கல்விகேள்விமுதலிய பிரமசரியக்காத்தலுங்கூறி, மேல், "தேவந்தியென் பாண்மனைவி" என்பதனுன் விவாகமும் காருகத்தமுங் கூறினமையுமுணர்க. இறையோனும்: உம்மை சிறப்பு. வழக்குரைத்தெனவே, தன்மனைவிக்குப் பொருட்குறைபாடில்லாமற்செய்து என்பதாயிற்று. இறையோனும் அவர் மடிந்த பின்னர்க் கடன்கழித்து வழக்குரைத்தென்க. தாயரென்றூர் மாலதியையும் கூட்டி. மேயநாள் - மேவியநாள்; இவளைத் திவலஞ்செய்து [3] நாலீராண்டு கழிந்த பின்னர்; 'மேவினன்' என்று பாடமோதித் தன்னை மேவினவனென்று பொருளுரைப்பாருமுளர்

௬௬ - ௯. தேவந்தி யென்பாள்.........ஙீங்குதலும்

(இ - ள்.) அங்ஙனம் கூடிநடந்த தன்மனைவியாகிய தேவந்தியென்று பெயர்கூறப்படுவாளுடைய பூவின்றன்மை தலைவந்த மையுண்டகண்கள் இதனைப் பொறுப்பனவாகவென நிரூபித்துக்கொண்டு பின்பு அவளைமேவித் தனது எக்காலத்தும் மூதிராத இளைய அழகினையுடைய நலத்தை வெளிப்படுத்தி அவன் அவள் குறிப்பினையறிந்து அதற்கேற்ப அவட்கு நீ எம்கோட்டத்து வாவெனச்சொல்லிப் பிறர்க்கெல்லாம் தீர்த்தத்துறைபடிவேனெனச்சொல்லி நீங்கினானெவென்க

மக்கள்கண்ணிற்குத் தெய்வயாக்கை காணப்பொருதாகலின் இவள்கட்குப் பொறுக்கக்கடவதென்று நிரூபித்துக்கொண்டான்; [4] "அக்காரத் துள்ளோ ரறியா மரபின், வந்து" என இதனுள்ளும், [5] "காந்துரு வெய்திய கடவு ளாளரும்", [6] "தேவரு மக்களு மொத்துடன் றிரிதரு, நாலேழ் நாளினும்" என மணிமேகலையுள்ளுங் கூறினமையானுமுணர்க. இனி உண்கணென்பதனை முன்னிலை வினியாக்கி இம்மையுடைய நீ பொறுக்கவென்று சொல்லிக்காட்டினுனெனினு மமையும்.

௬௮ - ௭0. தூமொழி..........கொண்டிருப்பாள்

(இ - ள்.) அன்னை மாகிய தூமொழி, என்னெஞ்சிற்பிணித்தகணவன் தீர்த்தத்துறைகளெங்கும்போய்த் தீர்த்தமாடுவேனென்று என்னைவிட்டகன்றனன்; மறுத்தும் இவ்விடத்தே அவன் மனத்தைத் திரும்பப்பண்ணி அழைத்துத் தருவாயென்று ஒருபெயரிட்டுக்கொண்டு அவன்கோட்டத்தை வழிபடுதலை நாடோறும் கடனாகக்கொண்டிருக்கின்றவளென்க.

௭0 - ௭௪. வாட்டருஞ்சீர்.....கணவனோ டென்றூள்

---

[1] "தோற்பது கொண்டு புகாஅ ரவை" பழமொழி, ௪.
[2] திருக்குறள், ௧௧௧.
[3] சிலப்பதிகாரம், ௧0: ௮௫.
[4] " ௯: ௭௨ - ௩.
[5] மணிமேகலை, ௩: ௩௫.
[6] " " ௩௬ - ௭.

(இ - ள்) நிறைந்த சீருடைய கண்ணகியாகிய நல்லாளுக்குக் கொழுநன் பிரிதலால் உற்றதோர் துன்பமுண்டென்று நினைந்த நெஞ்சின்வருத்தத்தையுடையாளாய்க் கோட்டத்தைநண்ணி அதுகுமுதலியவற்றை இவள் கணவனைப்பெறல் வேண்டுமெனத் தூவிப் பின்னர்க் கண்ணகிபாற்சென்று ஆண்டு ஆசிகூறுவாள் கணவனைப் பெறுவாயாகவென்றாளென்க.

இனி, கண்ணகிபானண்ணிச் சென்று தூவிக் கணவனோடு வாழ்வுபெறுகவென்றாளெனினுமமையும். வாடு வாட்டென விகாரம்; வாடுதல் - குறைதல்; குறைதலிலவெனவே நிறைந்தவென்பதாயிற்று; பிறரால் வாட்டுதலிலவெனவுமாம். இனைதல் இனையாயிற்று; விகாரம். கணவனோடு - கணவனை.

௪௪ - ௫௪. பெறுகேன்............நகையாகும்

(இ - ள்.) செறிதொடி, நீ இங்ஙனங்கூறுதலாற் பெறுவேனாயினும் என்னெஞ்சம் ஐயுறுகின்றதுகாண்; அஃது எற்றாலெனின், நெருநற் கண்டுற்ற கனவின்கண் என்கொழுநன் என்னைக் கைப்பற்றினனாய்ப்போக யாங்கள் ஒரு பெரிய பதிக்கட்புக்கோம்; அங்ஙனம்புக்க பதியிடத்தே எங்கட்கு வலாததோர் படிற்றுரையை அவ்வூரார் இடுதேளிடுமாறுபோல என்மேலிட்டனர்; அங்ஙனம் அவரிடப்பட்ட அப்படிற்றுரைக் கோவலற்கு ஓர் தீங்குற்றதென்று பிறர் சொல்லக் கேட்டு அதுபொறாது அவ்வூரரசன்முன்னர் செல்லாதேன்சென்று வழக்குரையாதேன் வழக்குரைத்தேன்; ஆதலால் அவ்வரசனோடு அவ்வூர்க்கும் உற்றதோர்தீங்குண்டு; ஆனாலும் அவை தீக்கனாவாதலான் நினைக்குரையேன்; இங்ஙனம் தீவினையுற்ற என்னோடு பொருந்திய மிக்கோனுடனே யான்பெற்ற நற்றிறங்களை நீகேட்பாயாயின் அது நினக்கு நகையைத்தருமென்றுசொல்லவென்க.

கடுக்கும் - ஐயுறும்; கடியென்னுமுரிச்சொல் ஈறுதிரிந்தது; [1] "போற்றினரியவை போற்றல் கடிந்தபின், றேற்றுதல் யார்க்கு மரிது" என்றாற்போல. அது, [2] "ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே" என்பதனான் முடிந்தது. கனவினுற் கடுக்குமெனினுமமையும். இடுதேளிடுதல் - தேளிடப்படுவார் காணுமே தேளல்லாததொன்றை மறையக் கொடுவந்து மேலேயிட்டு அவரைக் கலங்கப்பண்ணுதல்; பாய்ச்சுத்தேளென்பாருமுளர். என்றன்மேல்: தன், அசை. என்றன்மேலென்றாள், பெண்பாற்றன்மையான்; அன்றி இப்பழியைத் தான்சுமந்துநிற்றலானெனினுமமையும். தீங்கென்று அது கேட்டு - தீங்கென்றுசொல்ல அதுகேட்டு; சொல்லவென ஒருசொல்வருவிக்க. ஒடு, எண்ணொடு; வேறுவினை ஓடுவுமாம்; அவது காவலன் மரணமும் ஊர்தீப்பாடும். உம்மை, இறந்தததழீஇயவெச்சவும்மை. உரையாடேனென்றாள்; [3] "உரையா இழித்தக்க காணிற் கனா" என்பது பழமொழியாகலின். தீக்குற்றம் - கடிதானகுற்றம்; அவது முலைதிருகியெறிதல். நற்றிறம் - இருவரும் சுவர்க்கம்புகுதல். நகையாகுமென்றாள், இது கிட்டாததொன்றாகலின். எனவென ஈண்டும் ஒருசொல் வருவிக்க.

---

[1] திருக்குறள், ௬௯௩.
[2] தொல்காப்பியம், உரிச்சொல்லியல், சூ. ௮௬.
[3] பழமொழி, [illegible].

௫௯ - ௬௪. பொற்றொடீஇ...........பின்னரே

(இ-ள்.) பொற்றொடீஇ, நீகண்டகனாக்கொண்டு வருந்தவேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை; நின்கணவன்காரணமாக ஒருநோன்பு முற்பிறப்பிலே தப்பினாய்; அதனால் உள்ளதீங்குமிக்கன; அத்தீங்கும் கெடுவனவாக; காவிரி தன்னீரைக்கொண்டுசென்று கடலோடெதிர்த்து அலைக்கும் சங்கமுகத் தயலதாகிய பூவினிதழவிழும் நெய்தற்கானலிடத்து இரண்டு தடாகமுள்ளன; அவை யாவையெனிற் [1] சோமகுண்டம் சூரியகுண்டமென்னும் பெயரையுடையன; அவற்றின் துறைகளின்மூழ்கிக் காமவேள்கோட்டத்திற்புக்கு அவனைத் தொழுதாராயின், அவர் இப்பிறப்பிலுள்ள நாளெல்லாம் தங்கணவரோடும் பிரிவின்றியிருந்து இவ்வுலகத்து இன்பமுறுவர்; மறுமைக்கும் போகபூமியிலேயும் போய்ப்பிறந்து கணவரோடும் பிரிவின்றி முன்றபல்லங்காலம் இன்பநுகர்வராதலான் அவற்றை யாமும் ஒருஞான்று ஆடக்கடவேமென்று சொன்ன தேவந்திக்குக் கண்ணகி அங்ஙனம் துறைமூழ்குதல் [2] தெய்வந்தொழுதல் எங்கட்கு இயல்பன்றென்று சொல்லி இருந்தபின்னாகவென்க.

[3] "காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்" என்றாராகலின், இங்ஙனங்கூறினாள். இக்குண்டமிரண்டிற்கும இவ்வுலகத் தின்புறலும், போகபூமியிற்பிறத்தலும் சிறனிறையாக்கலுமொன்று; அவற்றை, [4] 'இருகாமத்திணையேரி" என்றார் பட்டினப்பாலையிலும்

௬௪ - ௬. நீடிய காவலன்.........குற்றிளையாள

(இ - ள்.) அங்ஙனஞ்சொல்லி அவளிருக்கின்றவளவிலே குற்றொழிலினையாள் காவலன்போலுங் கோவலன் நீடிய நம்கடையிடத்தானென்றாளென்க.

அன்றித் தூரத்தேபார்த்து ஐயுற்று நம்காவலன் போலுமென்று அவனுழை யணிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றாளெனினுமமையும். இனி, நம்கோவலன் வருகின்றவரத்து நம்மை நெடுங்காலம் காப்பான்போலே இராநின்றதென்றாளெனினுமமையும்.

௬௬ - ௭௧. கோவலனும்...........தருமெனக்கென்ன

(இ - ள்.) அங்ஙனங் கடைத்தலையானான கோவலனும், [5] கொடியிடையார் தாம் விளக்கங்காட்டிக் கோலங்கொள்ளாநிற்ப, அக்காலத்தேவந்து பெருமையமைந்த சயனத்திடத்தேபுக்கு அவன் தனது பைந்தொடியுடைய மேனிவாட்டமும் நெஞ்சுவருத்தமுங்கண்டு எல்லாப்பொருளினும் பொய்யை மெய்யாகப் பொருந்துவித்தொழுகும் பொய்த்தியோடுங்கூடி ஆடிய ஒழுக்கத்தினானே நம் குலத்திலுள்ளார் தேடித்தந்த மிக்க நிதிக்குன்றமெல்லாம் அவள்பொருட்டால் தொலைந்தன; அதனான் இல்லாமையுண்டாதல் எனக்கு நாணைத்தருகின்றது காணென்னவென்க.

---

[1] இங்கேகூறிய சோமகுண்டமும் சூரியகுண்டமும் முறையே திருவெண்காட்டிலுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமுமாமென்று சிலபெரியோர் கூறுகின்றனர்.

[2] "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை", திருக்குறள், ௫௫.

[3] சிந்தாமணி, ௭௧௮.

[4] பட்டினப்பாலை, ௩௯.

[5] இக்காதை அடி, ௩ - ௪.

பாடு - படுக்கையுமாம். சலம் - பொய். சலதி - பொய்த்தி. ஆடுதல் - உடலுதல். குலந்தருவான்பொருள் - தொன்றுதொட்டுவருகின்றபொருள். இன்று நாளுந்தருமென்றது, 'கெட்டால் மதிதோன்றும்' என்னும்வழக்கு.

௭௨ - ௭௫. நலங்கேழ்...........கொண்மென

(இ - ள்.) இவ்வாறு அவன் தன்னைப்போற்றி இலம்பாடு நாணுந்தருமென்றதனை மாதவிக்குக்கொடுக்கும் பொருட்குறைபாட்டால் தளர்ந்து கூறினனாகக் கருதி ஒளிபொருந்தியமுகத்தே நலம்பொருந்திய சிறிய முறுவலைவிளைத்து இன்னும் சிலம்பு உரிமையுள; அவற்றைக் கொண்மினென்றாளென்க

சிலம்புளவென்றாள், இவையொழிந்த கலனெல்லாம் தொலைதலால் இவை அணியாதிருத்தலின் அவனறியானாகக்கருதினும் அவன் தளர்ச்சிகூறுதலால் தான் இவையுண்மையுணர்ந்து கூறினாளென்க. புலந்து கூறினாளெனிற் கற்பின் றன்மையன்றாம்.

௭௬ - ௮௦. சேயிழை கேள்...........கால்சியா முன்.

(இ - ள்.) இங்ஙனம் கருதியசேயிழாய்! கேள்; நீசொன்ன இச்சிலம்பை நான் வாணிகமுதலாகக்கொண்டு முன்பு நான்வாங்கியழித்தகலனையும் கெட்ட பொருளையும் தேடித்தொகுத்தலைத் துணிந்தேன்; அஃது எவ்விடத்தே சென்றெனின், விரிந்த புகழையுடைய மதுரையென்னுநகரிடத்தேசென்று; ஆதலால், கோதாய்! அதற்கு நீ இப்பொழுதே இங்குநின்றும் என்னோடு எழுவாயாக வென்று சொல்லி முற்பவத்தில் தானசெய்த தீவினை நெருங்காலநின்று நெஞ்சை ஒருப்படுத்துதலானே அவ்வினையினது பயனைக்கொண்டான்; எப்பொழுது போதற்கெனிற் கங்குலை அவ்விடத்தினின்றும் சுடர் போக்குவதன்முன்னே யென்க.

சீத்தல் - விளக்குதல். சிலம்புமுதலா...........உற்றேனென்பதற்குக் கலனைச் சிலம்பாலும் பொருளை முதலாலும் ஈட்டுதலுற்றேனென்றானெனினு மமையும்

இது, கனவென்னும் பொருளையேகருதாது மாலதிகதையையும் தேவந்தி கதையையும் கலந்துகூறிற்றேனும், உறுப்பழிவின்றி நடந்ததேனும் முந்நான் கடியினிறந்துவருதலான் நெடுவெண்பாட்டாகாது கலிவெண்பாட்டாதலுணர்க.

வெண்பா.

காதலிகண்ட...........கால்சியாமுன்.

இவட்கு மேற்கூட்டமின்மையாற் [1] கருநெடுங்கண்ணென்றார்; கனவு சொல்லை வதிதாக்க வினைகடைக்கூட்ட வியங்கொண்டானென்க. சொல்வதி தாக்குதல் - வேனிற்காதையிற் காலைகாண்குவமென்றசொல்லைப் பயனின்றாக்குதல்.

௯.—கனாத்திறமுரைத்தகாதை முற்றிற்று.

## பத்தாவது.

# நாடுகாண்காதை.



வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிரு ணின்ற கடைநாட் கங்குல்
ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
ஏழகத் தகரு மெகினக் கவரியுந்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந்
* தாளொடு குயின்ற தகைசால் சிறப்பி
னீணெடு வாயி னெடுங்கடை கழிந்தாங்
கணிகிளர் ரவி னறிதுயி லமர்ந்த
† மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்
பணையைந் தோங்கிய பாசிலைப் போதி

---

க. வான்கண் - ஆதித்தன். விழித்தல் - விளங்குதல்.

உ. வெண்மதி நீங்க - வெண்மதி நீங்கின அளவிலே.

ங. காரிருணின்ற கடைநாள் - காரிருள் கடையிலே நின்றநாள்; அது பூருவபக்கம்.

ச. ஊழ்வினை கடாவுதலால் உள்ளந்தன்னைத் துரப்ப; வினைசெலுத்தி நெஞ்சை ஓட்ட வெனவுமாம்.

ரு. ஏழகத்தகர் - மேழகம். எகினமாகிய கவரி.

எ. தாளொடு குயின்ற தகைசால் சிறப்பெனவே தாள்முதலான உறுப்பெல்லாமடங்கின; தாளொடுகுயிற்றுதல் - போர்க்கதவு பண்ணும்போதே தாளோடே பண்ணுதல்.

அ. வாயிலென்றது, ஆகுபெயராற் கதவை. வாயினெடுங்கடையாவது - முதன்மை தோரணவாயில்.

(௬) துணையெனத்திரிதருமென்றது - இவை ஒன்றோடொன்று இனமல்லவாயினும் பழக்கத்தாற்றிரியும் (அ) வாயில்.

௰. வலஞ்செயா - வலத்திலேயிட்டு.

கக. மரப்போதிக்கு ஐந்துகொம்பாதலாற் பணையைந்தோங்கியவென்றார்.

---

(பி - ம்.) * 'தாழொடு குயிற்றிய தகை' † 'மணிவணன்'

யணிதிகழ் நீழ லறவோன் திருமொழி
யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் * போகிப்
௧௫. [1] புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் † தடக்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் ‡ குழீஇய
வைவகை நின்ற வருகத் தானத்துச்
[2] சந்தி யைந்துந் தம்முடன் கூடி
௨௦. வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப்
[3] பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ
னீரணி § விழவினு நெடுந்தேர் விழவினுஞ்
சாரணர் வரூஉந் ‖ தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட

௧௨. திருமொழி - தருமம்.

௧௩. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அறைந்தனர் சாற்றல் - ஆகமத்தைச் சொல்லி விளங்கப் பொருள் சொல்லுதல்.

௧௪. இந்திரவிகாரம் - இந்திரன் நிருமித்தது. ஏழுடன்போகி என்றது - இவர் அன்று கழிந்தபடியாலே அவற்றையுடனே கழிந்துபோயென்றவாறு.

௧௫. (ப.) புலவூண் - மச்சமாம்ஸம்.

௧௫ - எ. (ப.) விரதத்தோடே அடங்கிய கொள்கையையுடைய விழுமியோரென்க.

௧௮. ஐவகைநின்ற கோயில் - ஐந்து சந்திகளும் ஐந்துகோயிலாய்நின்ற கோயில்.

௧௯. சந்தியைந்து - ஐஞ்சந்தி, அவையாவன: பஞ்சபரமேட்டிகள் தெரு. அவர்:— அருகர், சித்தர், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சாதுக்கள்.

௨௦. இவர்கள் கூடினமன்று.

௨௨. நீரணிவிழவு - திரு அபிடேகவிழவு; அயனம், சங்கிரமம், புதுப்புனலாட்டெனவுமாம். தேர்விழவு - திருநாள்.

௨௪. உலகநோன்பிகள் - உலகவழக்கொடு பொருந்தின நோன்பிகள்; அவர் இல்லறத்தையுடைய சாவகர்.

---

[1] 'புலவுத்துறந்த நோன்புடையாராகலாற் பொய்கூறார்' தொல். மரபு. ௫. ௧௪ - பேர்.

[2] ௧௯ - ௨௦: "சதுக்கமுஞ்சந்தியும்" முருகு. ௨௨௫.

[3] சிலப். பதிகம், ௪; ௨௧ - ௫=சிலப். ௧௫: ௧௫௨ - ௪.

(பி - ம்.) * 'போகிப் புலவூண் டுறந்த' † 'அடக்கிய' ‡ 'குழீஇயவைவகை' § 'விழவினும்' ‖ 'தகுதியுண்டாகவுலக'

இலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு
மலைதலைக் கொண்ட பேர்யாறு போலு
¹முலக *விடைகழி யொருங்குட னீங்கிக்
கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருதம் † மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
²ரிலவந் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் ‡ கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி லுழைந்து
காவதங் கடந்து § கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து

(உ0) இம்மன்றிற் (உக) பிண்டிக்கீழ்ஸ்லே (உச) இட்ட (உரு) சிலாதல மென்க.

உசு-எ. வாயிலுக்குவமம் மலை; தெருவுக்குவமம் யாறு. உலகவிடைகழி - உலகத்தாரெல்லாரும் போகலான ஊர்வாயில்; தெருவொழுங்குக்கு இடையே கழிதலால் இடைகழி.

உஅ. கலை - சரீரம்; அன்றிக் கலையிலாளனென்றது, கலைகளின்றான் காமனென்றவாறுமாம்.

உக. மன்னவன் - சோழன். இறுக்கும் - இறையிடும்.

௩0. மரப்பந்தர் - சோலை.

உஅ - ௩௧. காமன் வேனிற்காலத்தையும் தென்றலையும் சோழனுக்குத் திறையிடும் பொழிலையுடைய எயில்; இலவந்திகை - நீராவி; எயில் - சுற்று மதில்; சோலையையும் பொய்கையையுமுடைய எயில்.

௩௨. தண்பதப்பெருவழி - புனலாட்டுக்குப்போம் பெருவழி; திருமஞ்சனப்பெருவழியுமாம்.

௩௩. காவிரிக்கரையிடத்து வாயில்.

௩௪. குடதிசைக்கொண்டு - மேற்கு நோக்கி.

௩௫. வடபெருங்கோடு - வடகரை.

-எ. கவுந்தியடிகள் பள்ளியையுடைய காவிற்பொருந்தி.

¹ உலகவிடைகழி: புறநா. ௬௨.

² இலவந்திகை: சிலப். ௧௪ : எக - அஉ அடியார். விசேடவுரையைப்பார்க்க.

(பி - ம்.) * 'இடைகழியொருங்கு' † 'மன்னவர்க்கு' ‡ 'கடை முகங்கழிந்து குடதிசைக்கொண்ட' § 'கவுந்திப்பள்ளியோர் பூமரப்'

முதிராக் * கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ
வாறைங் காதம் மகநாட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தென நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
† காவுந்தி யையையைக் கண்டடி தொழலு
முருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் திருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னோ வுறுக ணாளரிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறென
வுரையாட் டில்லை ‡ யுறுதவத் தீர்யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ

௪௨. ஆறைங்காதம் - முப்பதுகாதம்; ஆறைங்காதமென்றூன், அவட்கு அறுகாதம் ஐங்காதமென்றாற்போலத் தோன்ற.

௪௩. கூந்தல், பெயர். நக்கு - நகைத்து; நகுதல் சோக கருணைதனை நோக்கதாற்பிறந்த விகாரம்.

௪௪. சிறையகம் - பூசிகோயிலின் ஒருபக்கத்தே பள்ளியகம்.

௪௭. பெருமகன் - அருகதேவன்.

௪௮. உறுகணாளரில் - துன்பமுறும் பாவமுடையார்போல; மிடியாளரைப்போலவென்றுமாம்.

௪௯. கடைகழிந்து - வாசல்விட்டு.

௫௰. உரையாட்டில்லை - சொல்லாவதொன்றில்லை; ஒன்று - ஒருவாசகம்.

௫௧. மூதூர்க்கண்ணே பொருளீட்டும் வேட்கையேன்; பொருள்வரைதல் வேட்கையென்க; வரைதல் - தன்னிடத்து ஆக்குதல்; இன்னதற்கு மேற்பட்டது தானத்துக்கேயென்று வரைந்திடுதலுமாம்.

மேற் கவுந்தியடிகள் வார்த்தை :—

௫௨. பரற்பகை உழக்கமாட்டா. ௫௩. காடும் நாடுமாகிய வழிகடக்க.

௫௪. அரிதிவள் செவ்வியென்றது - இவள் செவ்வியின் மென்மையால் நடக்குந்தன்மையிலளென்றதாம். அறிகுநர்யாரோ-வல்லனாகவுமறிகுமன்றே.

(பி - ம்.) * 'கிளவிமுள்ளெயிறு' † 'காவுந்தியையைக்கண்டு' ‡ 'உறுதவத்தீர்'

௩௩

வரிய தன்றீங் கொழிகென வொழிமின்
[1] மறவுரை நீத்த மாசறு * கேள்விய
றவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே † னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்
கோவலன் காணாய் கொண்ட விந்நெறிக்
கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் ‡ படர்குவ மெனினே
[2] மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த § தாதுசோர் பொங்கர்
பொய்பறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டு
முதிர்பூஞ் செம்மலி னூதுக்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டு
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்

௫௮ - ௯. மதுரைக்கு ஒன்றியவென்றதற்குப் போகவென ஒருசொல் வருவிக்க.

௬௩. என - என்று கோவலன் சொல்ல.

௬௪. காணாய் - பாராய். கொண்டநெறி - வழிக்கொண்ட நெறியிடத்து; இந்நெறி - காவிரி வடகரைவழி.

௬௫. யாங்கும்பலவுள - யாங்கும் மிகவுள்ளன.

௬௭. (பா) படர்குவமாயினென்றாள், தன்னையும் உளப்படுத்தி.

௬௮ - ௭௧. சண்பகம் குழியைநிறைத்த பொங்கர். போற்றா மாக்கள் - பரிகரித்துப்போகாதமாக்கள்.

குழியைச் சண்பகநிறைத்த தாதுசோர் பொங்கர் பரிகரியாமாக்கட்குத் துன்பந்தருந்தரும்; பழம்பூவானிறைத்தல் பெற்றும், தாதுசோர் பொங்க ரென்றலின்; பொங்கர் - சோலையுமாம்.

௭௩. (பா) மேல்தூங்குகிற பழமாகியபலவிலே முட்டினுமுட்டுவர்.

௭௪. வலயம் - தோட்டம்.

---

[1] தொ - எ - மெய்ப். ௩௩: ௩௪ - ஐ. [2] சீவக. ௩௭௩௩ - ந. மேற்.

பி - ம்) * 'கேள்வியுறவுரை.' † 'ஆதலின்.' ‡ 'படர்குவமாயின்.' § 'தாதுசோ.'

செஞ்சாலிப் பலவின் பாற்பகை யுறக்கும்
கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு முண்டிக் காரிகை யாங்கட்
கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னொண்டு கொள்ளவுங் கூடுங்
குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய விடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடு
மெறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா
வயலுஞ் சோலையு மல்ல தியாங்கணு
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோளொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெனத்

௭௩. யாற்றங்கரையைவிட்டு வயல்வழியேபோதல்.

௭௯. நீர்நாய், எழுவாய். ௮௦. விலங்க - குறுக்காக.

௮௪. வேட்கை - தண்ணீர்த்தாகம். அறிவஞரெய்தி - அறிவுமயங்கி.

௮௬. குறுநர் - பறித்தல்.

௯௦. எறிநீரடைகரை - நீர்க்கரை; கடற்கரையென்பாருமுளர்.

௯௩. துன்பம் - நமக்கு வருந்துன்பம்.

௯௧ - ௩. அலவனையும் நந்தையும் போற்றாது முறையாகவின்றி அடி யொதுக்கத்தினாலே உறுநோய அவையிற்றுக்கு உண்டாமாயின், அப்பாவம் தாங்கவொண்ணா......தபடியால் கடற்கரைவழியன்று.

௯௫. அயல்பட - வேறுபட. ௯௭. ஓம்புகவெனச்சொல்லி

தோமறு * கடிஞையுஞ் சுவன்மே லறுவையுங்
காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்
கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற் கடுங்குரன் மேற்றொடுங்
கூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே † யல்ல
தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
[1] கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்

கஅ. அறுவை - தோளிலிடும் உறி.

க00. மொழிப்பொருட்டெய்வம் - மொழியாகிய தெய்வம்; பொருள் மொழி - உபதேசமந்திரம்; பஞ்சமந்திரம்.

கஎ - க0க. குறுகாதோம்பெனக் காவுந்தி கொண்டு மொழிப்பொருட் டெய்வம் நமக்கு வழித்துணையாகவென்றுசொல்ல வழிபோகப் புரிந்தோர்.

க0உ. கரியவன் - சனி. புகைக்கொடி - தூமகேது. சனி தூமனேடுகூடினும்.

க0சு. தாரம் - சந்தனம் அகில்முதலாயின.

க0எ. கடல்வளன் - "ஓர்க்கோலை... ..ஐந்து" எதிர - வளனேதோடு எதிர்க்கையாலே; கடல்வளன் காவிரியோடெதிர. கயவாய் - புகார்.

க0க. ஓவுதல் தவிர்ந்து.

கக0. தூம்பி - பத்தர். கிழார் - பூட்டை. ககக. பிழா - இடா.

ககச. கம்புட்கோழி - ஒருசாதி. ககசு. நீர்நிறக்காக்கை - நீர்க்காக்கை.

ககஎ. உள்ளுமூரலும் - உள்ளலும் ஊரலும். புதா - பெருநாரை; மரக் கானாரையுமாம்.

[1] ககச - கூ: புட்களின் குரல்=பதிற். அச.

(பி - ம்.) * 'கடிகை' † 'அன்றியுமாம்பியும்'

வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையு
முழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய
கழாஅ மயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு
கவிர்ச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
கருங்கை வினைஞருங் களமருங் கூடி
யொருங்குநின் றார்க்கு மொலியே யன்றியுங்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறாடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியுங்
கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் *கைதொழ
வேரொடு நின்றோ ரேர்மங் கலமு
மரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
[1] † பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டுந்
தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்

௧௨௦. உழாஅ நுண்டொளி - தானேபட்டசேறு. ௧௨௧. காரான் - எருமை.

௧௨௨. சொரிபுறம் - தினவையுடைய முதுகு.

௧௨௩. குமரிக்கூடு - அழியாக்கூடு. கொழும்பல்லுணவு - பலவர்க்கத் துணவு; அவரை துவரையுள்ளிட்டன.

௧௨௫. கருங்கைவினைஞர் - பள்ளர், பறையர். களமர் - உழுகுடிவேளாளர்.

௧௩௨ - ௫. அறுகையும் குவளையையுங்கலந்து கதிரோடு தொடுத்தமாலையை ஏரிலே சூட்டிப் பாருடைப்பனர்போல் ஏரொடுநின்றோர்; சூட்டக்கலப்பையிலே சூட்டியென்றுமாம்.

௧௩௬. அரி - அரிந்திடு சூடு.

௧௩௭. முகவைபாடுதல் - பொலிபாடுதல்; முகவையென்றார், நெல்லு முகந்துகொடுக்கப்படுதலாலே; [2] "புகர்முகமுகவை" போல.

[1] 'பெருஞ்செய்ந்நெல்லின்': புறநா. ௧௨௦ : ௧௦ ; நன். சூ. ௨௪௧-மயிலை. மேற்.
[2] புறநானூறு, ௧௪௦. (பி - ம்.) * 'கைதொழுது'; † 'பெருஞ்செந்நெல்லின்'

பேர்யாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளா
துழைப்புலிக் கொடித்தே ரூரவோன் கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்
மறையோ ராக்கிய * வாவுதி நறும்புகை
இறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
ரிரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்னா ளொருநா
ளாற்றுவீ யரங்கத்து † வீற்றுவீற் றாகிக்

௧௪0. யாற்றடைகரைகளிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு. நீரின் - நீர்மையுடனே; உருவக் கேட்பபோதலாகையுமாம்.

௧௪௧ கேட்ட உவகையால் அவலங்கொள்ளாராய.

௧௪௨. உழைப்புலிக்கொடி - புலியை இடத்திலேயுடையகொடி.

௧௪௩. மழைக்குக் கருப்பமாவது அமம அட்டில் - ஓமசாலை.

௧௪௨ - ௩. கொற்றத்துடனே மழைக்கருவையும் தோற்றுவித்து அவ்வளவிலே விளங்கிய சாலையென்க.

௧௪௪. (பா) வானவருணவு - சோறுவி; அவியிடுகிற ஆவி.

௧௪௫. இறை - இறப்பு.

௧௪௮. காவிரிப்பாவைதன்புதல்வர் - வேளாளர்.

(௧௫0) விளைப்போரான (௧௪௮) புதல்வர் (௧௫0) பழவிறலூர்களும்.

௧௪௯. புரப்போர் - காக்குமரசர்.

௧௫௧. பொங்கழி - தூற்றுப் பொலி. பரந்து - பரக்க.

௧௫௨. மங்குல் - இருட்சி

(௧௪௭) மறையோரிருக்கையும் (௧௫0) பழவிறலூர்களும் (௧௫௨) மலையிற்றோன்றும் (௧௫௩) நாடென்க.

(௩௧) வழிப்படர்புரிந்தோர் (௧௫௫) செல்லுநாளுள் ஒருநாளென்க.

௧௫௬. ஆற்றுவீயரங்கம் - ஆற்றை மறைக்குமரங்கம்; ஆவது குறை; அது சீரங்கம்; ஆற்றுவியென்பாருமுளர்.

1 திருக்குறள். ௫௪௪ - பரி. மேற்.
(பி - ம்) * 'வானவிதறும்புகை.' † 'வீற்றுவேறுகி.'

குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா றொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்கிப்
பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
இலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக வென்றே
கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினு
மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்
கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணூ
[1]யொழிகென வொழியா தூட்டும் வல்வினை
யிட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி
யொட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா
கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்க
ளறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
றரும முதல்வன் றலைவன் றருமன்
பொருவன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்

௭. மரம்பயில் அடுக்கம் - மரச்செறிவு; அடுக்கம் அரங்கத்துக்கு அடுத்தவிடமுமாம்.

௮. ஒருசிறை - ஒருபக்கத்திலே.

௧௰. ஐயர் - முன்சொன்ன உலகநோன்பிகள்.

௧௰௩. முன்புசொன்ன சாரணர்தோன்ற.

ஐயர் [2] பட்டினப்பாக்கத்திலிட்ட சிலாதலத்திருந்து தருமஞ்சாற்றுதல் சாரணர்க்கு அடையாக்கி அவர் இங்கேதோன்றவென்க.

௧௰௭. சிந்தைவிளக்கு - அவதிஞானம்; என்றது திரிகாலஞானத்தை.

௨௰௨. வித்தின் - வித்துப்போல.

[1] சிலப். பதிகம், ௫௫. [2] இக்காதை ௨௪ - ஆம் அடிமுதலியவற்றைப் பார்க்க.

மறுதா ரோதியென் மனம்புடை பெயரா
தென்றவ ளிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தா மாறுப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேர்யாற்று
நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியுந்
தீதுதீர் நியமத் தென்கரை யெய்திப்
போதவிழ் மிடைந்த பூம்பொழி லிருந்துழி
[1] வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
[2] கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் [3] சென்றோர்
காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ராரெனக் கேட்டீங் கறிகுவ மென்றே
நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருட
னாற்றுவழிப் பட்டோ ரார்என வினவவென்
மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென
வுடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்

௨௦௭. உயர்மிசை - சிலாவட்டம். ஓங்கி - எழுந்திருந்து.

௨௧௩. பந்தம் - ஸம்ஸாரம்.

௨௧௫. நீரணிமாடம் - பள்ளியோடம்; போகி - அதனூலேபோந்து.

௨௧௯. வம்பப்பரத்தை: வம்பு - புதுமை; பரத்தைத்தன்மைக்குப் புதியவன். வறுமொழியாளன் - பயனில்சொல்லுவான்.

௨௨௧ - ௨. காமனும் தேவியும்போலும் இவராரெனக்கூறி; போலும், ஒப்பில்போலி.

௨௨௩. நோற்றுணல் - பட்டினிவிட்டுணல்.

௨௨௪. ஆற்றுவழி - நெறியிடத்து.

௨௨௫. மானிடயாக்கையரென்றது - நீங்கள் நினைத்த காமனும் தேவியுமல்லரென்றவாறு.

௨௨௬. பரிபுலம்பினர் - செலவால் வருந்தினர்.

[1] சிலப்பதிகாரம், கூ: கக. [2] தொல். முதற்சூத்திரவிருத்தி, மேற்.
(பி - ம்.) [3] 'சென்றுழி'

தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
வெள்ளுநர் போலுமிவ ரென்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்ட தவந்தரு சாபங்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்
குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினு
மறியா மையென் றரற்ற லவருந்
செய்தவத் தீர்துந் திருமுன் பிழைத்தோர்க்
குய்திக் கால முரையீ ரோவென
வறியா மையினி னிழிபிறப் புற்றோ
ருறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனும்
[1] முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்.

---

உஉக - ௩0. புதைத்து மூடிக்கொண்டு.

உ௩௪. பட்டதையறியார் - மனத்தில் இவர் (கவுந்தியடிகள்) நினைத்ததனால் அறிந்திலர்.

உ௩௫ - ௪0. பின்பு அறிந்தபடி: அவர் கண்முன்னே [illegible]படியாலும், பொல்லாங்கு கூறினமையாலும், அவ்விடத்து இவரல்லது வேறு சாபமிட வல்லாரில்லையாகலானும், இச்சாபம் இவராலேவந்ததென்று இவர் (கோவலனும் கண்ணகியும்) அறிந்தார்; அறிந்து உய்திக்காலம் உரையீரோவென்றார்.

உ௪உ. நொச்சி - மதில்; பதணமுமாம்; என்றது காவல்வேண்டாத அரணென்றவாறு.

உ௪௫. படர்நோய் - உறழ்ச்சியாலுண்டான நோய்.

உ௪௭ - ௮. முறம் - சுளகு. வாரணம் - யானை, கோழி; புறத்தே சிறையையுடைய கோழி - உறையூர்; வாரணம், ஆகுபெயர். யானையைக் கோழிமுருக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றினவிடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன்பெயராலே சோழன் ஊர்காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனால் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று

---

[1] முறஞ்செவி வாரணம்: கலி. ௪உ.

தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணு
மூரகத் தேரு மொளியுடைப் பாணியு
மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் *தனிக்கோ ணிலைமையு
மொரு பரிசா நோக்கிக் கிடந்த
புகார்க்காண்டம் முற்றிற்று.

---

வெண்பா.

காலை யரும்பி மலருங் கதிரவனு
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
யகழா லமைந்த வவனிக்கு மாலைப்
புகழா லமைந்த புகார்.

---

கரு. தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணும் : "புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கி" என்றது முதலாயின; (சிலப். அ: சச.)

கசு. ஊரகத்தேர் - இந்திரவிழவூரெடுத்தகாதையிற்சொன்ன ஊரின் வண்ணம்.

ஒளியுடைப்பாணி - "வெங்கட்டொலைச்சிய விருந்திற் பாணி" முதலாயின;—(சிலப். க0: கஙக.)

கஎ. பிறபொருள்வைப்பு - ...........முதலாயின.

முதலாவது

புகார்க்காண்டம் அரும்பதவுரையுடன் முற்றிற்று.

---

(பி - ம்.) * 'தன்கோணிலைமையும்'

௧ - ௩. வான்கண் விழியா.........கடைநாட் கங்குல்

(இ - ள்.) உலகிற்குக் கண்ணாகிய ஆதித்தன் தோன்றிவிளங்காத வைகறை யென்னும் யாமத்திடத்து மீனோடு அழகுபெறவெழும் வெண்மதியானது விசும்பினின்றும் நீங்கிற்றாகக் கரிய இருள் கடைக்கணின்ற கங்குற்பொழுதி லென்க.

என்பது அந்தச் சித்திரைத்திங்கட் புகுதி நாள் - சோதி, திதி - மூன்றாம் பக்கம், வாரம் - ஞாயிறு இத்திங்களிருபத்தெட்டிற சித்திரையும் பூரணையுங் கூடிய சனிவாரத்திற் கொடியேற்றி [1] "நாலேழ் நாளினும்" என்பதனான் இருபத்தெட்டுநாளும் விழாநடந்து கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற் பூருவபக்கத்தின் பதின்மூன்றாம் பக்கமும் சோமவாரமும்பெற்ற அனுடத்தில் நாட்கடலாடி ஊடுதலின் வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்க்கிழமையும் கேட்டையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப் பதினாலாம்பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்திருளிலேயென்றவாறு. அது பூருவ பக்கமென்பது தோன்றக் 'காரிருணின்ற கடைநாட் கங்கு' லென்றார்; [2] "குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேயவன கெடுகநின் றெவ்வ ராக்கம்', என இருண்மதியென்றார் மதுரைக்காஞ்சியுள்ளும். கண் - இறைவன்கண் ணென்பாருமுளர். விழித்தல் - விளங்குதல்; அது செயயாத வைகறை, ஆகு பெயர்; வைகல் - துயிறல்; அறல் - அறையாயிறறு; [3]"பொறியறை" போல.[4]

௪. ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப:—(இ - ள்.) முன்செய்த தீவினை முறையானேவந்து இவனுள்ளத்தைச் செலுத்துதலானேயென்க.

கடைஇ - செலுத்தியெனறுமாம்.

௫ - ௮. ஏழகத் தகரும்...........நெடுங்கடை கழிந்து

(இ - ள்.) ஏழகமாகிய தகரும் எகினமாகியகவரியும் தூய மயிரினையுடைய அன்னமுமாகியவிவை ஒன்றோடொன்று இனமல்லவாயினும் இனம்போலே விடாது திரியும் தாளோடுகூடப் பண்ணப்பட்ட பெருமைபொருந்திய சிறப்பினை யுடைய மிகவும் பெரிய கதவையுடைய இடைகழியைக் கழிந்தென்க.

நெடுவாயிற்கடை - பெரிய கதவையுடைய தலைக்கடை. தகர்முதலியன இவன் வளர்த்தனவாகலின், இவனைத் தம்மினமென்றுகருதித் திரியுமெனவுமாம்; வாயிற்கணெழுதினவற்றை இனமெனக்கருதித்திரியுமெனவுமமையும். தாளொடுகுயின்றவென்றார், போர்க்கதவாகலின் இனியெளகாமற் பண்ணுகின்ற போதே கூடப்பண்ணுதலான். ஏழகத்தகர்முதலியன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வாயில் - கதவு. கடைகழிந்தென்றார், மனையின்பெருமையும் காவன்மிகுதியுந்தோன்ற. இனி, இவன் அன்று கழிந்தானெனினுமமையும்.

[1] மணிமேகலை, க. அ. [2] மதுரைக்காஞ்சி, கசுரு - சு. [3] திரிகடுகம், ௬௩.

[4] இவ்விசேடவுரையிலுள்ள காலவரையறை பொருந்தாததுபோல் தோற்றுகிறது; ஆயினும் பிரதிகளிலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது.

அ - கO. ஆங்கு........வலஞ்செயாக்கழிந்து

(இ - ள்.) அங்ஙனம் வாயில்கழிந்தபொழுதே அரவணையின்மீதே அறிவோடு துயில்கொள்ளும் மணிவண்ணனென்னும் திருநாமத்தையுடைய திருமால் கோயிலை வலஞ்செய்து கழிந்தென்க;

ஆவது வலத்திட்டேகுதல். அணி - அழகு. அறிதுயில் - யோகநித்திரை. மணிவண்ணன, பெயர்.

கக - ச. பணையைந் தோங்கிய........ஏழுடன் போகி

(இ - ள்.) ஓங்கிய ஐந்துபணையினையும் பசிய இலையினையுமுடைய [1] மாபோதி நிழலின்கணெழுந்தருளிய அறவோனாகிய புத்தன் அருளிச்செய்த ஆகமத்தை ஆகாயசாரிகள் மறப்பின்றியோதி யாவர்க்கும் விளங்கப்பொருளுணர்த்தப்படும் [2] இந்திரனிருமிக்கப்பட்ட விகாரங்களேழினையும் அடைவேகண்டு அவற்றைக் கழிந்துபோயென்க.

அவை அவ்வூரப் [3] புத்தசைத்தியத்து இந்திரன் நிருமித்தனவாகிய ஏழரங்கு. மாபோதி ஐந்துபணையது... .. இயல்பு. திருமொழி - ஆகமம். அறைந்து சாற்றுதல் - [4] பாடமோதிப் பொருளுரைத்தல். விகாரம் - கையாற் கருவியாற்பண்ணாது மனத்தால் நிருமித்தல்.

கரு - உரு. புலவூண்டுறந்து.....தொழுது வலங்கொண்டு

(இ - ள்.) புலாலாகிய ஊணைத்துறந்து பொய்கூறாமையாகிய விரதத்தோடு பொருந்தி [5] அழுக்காறு அவாமுதலியவற்றைக் கைவிட்டு அறநூன்முதலியவற்றையறிந்து ஐம்புலனையுமடக்கிய கோட்பாட்டையுடையாராய் உண்மைவகையுணர்ந்த சீரியோர்திரண்ட ஸ்ரீகோயிலில் பஞ்சபரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்து சந்தியுங்கூடிவந்து தலைமயங்கியிருக்கின்ற மிக்க பெரிய மணற்றிற பூவையுடைய பிண்டியினது அழகுகிளரும் நிழற்கண்ணே விழு ஆயணதிகளினும் விழவுகளினும் ஆகாயசாரிகள் வரத்தகுமென்ற சாவகரெல்லாம் கூடியிடப்பட்ட விளங்காநின்ற ஒளியையுடையசிலாவட்டத்தை இவர்கடொழுது வலங்கொண்டென்க.

புலவூண் - புலாலோடே உண்ணுமூணுமாம.

புலையூண் பாடமாயிற் புலையருண்ணுமூணெனக. விரதத்து - விரதத்தோடே. அவலம் - அழுக்காறு அவாமுதலியன. அறிந்து - அறியப்படும் அறநூல்களை அறிந்து. - பஞ்சபரமேட்டிகளாவார்:—அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களெனவிவர்.

இனி, ஐவகை நின்ற வருகத் தானத்துச்சந்திமன்றென்பதற்கு ஐந்து ஸ்ரீகோயிற்சந்திகூடிய மன்றென்பாருமுளர் பொன் பொலிவாதலன்றிப்

[1] மாபோதி = மஹாபோதி; கௌதமபுத்தருக்கு ஞானோதயமானஇடத்துள்ள அரசமரம்; "போதிமூலம்" (மணி. ஙO : கO) என்பதன் குறிப்பைப்பார்க்க.

[2] சிலப். உள. கூஉ.

[3] புத்தசைத்தியம் - பௌத்த வித்தியாசாலை; புத்தாலயமுமாம.

[4] பாடமோதல் - மூலத்தை விளங்கச்சொல்லுதல்.

[5] "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு, மிழுக்கா வியன்ற தறம்" திருக்குறள், கரு.

பொலம் பொலிவாகாமையின் அருகனுக்கிணையான் எப்பொழுதும் பொற்பூவைப் பூக்கும் பிண்டியென்க. சிலாதலம் - சந்திரகாந்தக்கல்லாற் படுத்தது. சீரணி விழவு - அபிடேகவிழவெனினுமமையும்.

௨௬ - ௭. மலைதலைக் கொண்ட.........ஒருங்குட னீங்கி

(இ - ள்.) மலையிடத்தே தலையையுடையதோர் பெரியயாறுபோலும் உலகி லுள்ளோராயவர் போக்குவரவு செய்தற்கு அமைந்த ஊர்வாயிலை அக்காலத்துப் போவாரோடு கலந்துபோய் அதனைவிட்டுநீங்கியென்க.

உலகவிடைகழி - ஊர்வாயில். இடையேகழிதலின், அவ்வாயில் இடைகழி யாயிற்று கோயிற்கோபுரத்தை மலையாகவும் அதனோடு மணந்துகிடந்ததெரு வை ஆறாகவும் உவமித்தார்.

௨௮ - ௩௧. கலையி லாளன்.........எயிற்புறம் போகி

(இ - ள்.) மன்னவற்குக் காமன் வேனிலோடு தென்றலையும் திறையாக இடுதற்குப்பொருந்திய பலமலர்களை நிறைத்த நல்ல மரநிழலையுடைய இலவந் திகையினது எயிற்குப் புறத்திலேபோயென்க.

கலையிலாளன் - அநங்கன்; கலை - சரீரம். காமர் - அழகு. பந்தர் - நீழல். இலவந்திகை - நீராவியைச்சூழ்ந்த வயந்தச்சோலை. இஃது அரசனும் உரிமையு மாடுங் காவற்சோலை; [1] "இலவந் திகையி னெயிற்புறம் போகி, ஒலக மன்னவ னுழையோ ராங்குளர்" என்றார் மணிமேகலையிலும்.

௩௨ - ௩. தாழ்பொழி லுடுத்த .........கடைமுகங் கழிந்து

(இ - ள்.) இருமருங்கும் சோலைசூழ்ந்த புதுப்புனலாடப்போம் பெரிய வீதியையுடைய காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்ற வாயிலையும் கழிந் தென்க.

கடைமுகங்கழிந்தென்றார்; காலையில் நாள்சீராடுவோர் பிறர்முகநோக்காது போதற்கு மறைந்துகழிவர்; இவரும் அவ்வாறுகழிந்தாரென்றற்கு.

௩௪. குடதிசைக்கொண்டு:—(இ - ள்.) மேற்றிசையை நோக்கிக் கொண்டு,

௩௪ - ௫. கொழும்புனற் காவிரி.........பொழிலுழைந்து

(இ - ள்.) வளவிய புனலையுடைய காவிரியினது பெரிய வடகரையிற் பொழிலைக்கழிந்தென்க.

கோடு - கரை. நுழைதல் - கழிதல் ; அன்றி இளமரக்காவாதலால் தாழ்ந்த கோட்டிடை நுழைந்துபோயெனவுமாம்.

௩௬ - ௪௧. காவதங் கடந்து..................வினவ

(இ - ள்.) நறிய ஐவகைக் கூந்தலையுடையாள் அங்ஙனம் காதமென்று சொல்லப்படும் எல்லையைக்கடந்துசென்று கவுந்தியடிகளிருக்கின்ற பள்ளிக்கு

[1] மணிமேகலை, ௧: ௪௫ - ௬.

அயலதோர் பொலிவினையுடைய செறிந்த இளமரச்சோலையளவுஞ்சென்று பொருந்தி அவ்விடத்தே இனி இஃது இறுமெனத்தக்க கொடிபோலும் இடையும் அடியும் மிகவும்வருந்தி மேல் இளைப்பாற் குறுகவுயிர்த்து முற்றாத மழலை மொழியாலே கூர்த்த எயிறிலங்க மதுரையென்னுமூதூர் யாதுதானென்று கேட்பவென்க.

காவதம் - காதம்; பகுதிப்பொருள்விகுதி. பொதும்பர் - மரச்செறிவு; கோடரமென்றுமாம்.

சஉ - ரு. ஆறைங் காதம்....................நக்கு

(இ - ள்.) நீ கூறிய மதுரை நம் அகன்றநாட்டிற்குமேல் ஆறைங்காவதங் காண், இனி அண்ணித்தென்று கூறி நக்கென்க.

யாதென்றவட்கு முப்பதென்னும் பொருள்மறைந்து காதம் ஆறு காதம் ஐந்தென்றாற்போலிருத்தற்கு ஆறைங்காதமென்றான். நகுதல் - [1] துன்பநகை. கூந்தல், விளி.

சச - ரு. தேமொழி....................தொழுதும்

(இ - ள்.) அங்ஙனம்வினவின தேமொழிதன்னோடுஞ்சென்று தவவேலிக்கணிருந்த கவுந்தியடிகளைக்கண்டு அடிதொழுதலுமென்க.

சிறை - பள்ளியென்றுமாம்; ஸ்ரீகோயிலின் ஒருபக்கமுமாம்.

அ - சரு. கழிந்து கழிந்து போகிக் கொண்டு நீங்கிப் போகிக் கழிந்து நுழைந்து கடந்து பொருந்தி நக்குக் கண்டு அடிதொழுதலுமென்க.

சசு - கூ. உருவுங் குலனும்.........கருதிய வாறென

(இ - ள்.) இவர்கள் தொழுதார்களாக, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் இறைவனுலிற்கூறிய விரதந்தப்பாமையுமென்னும் இவற்றையெல்லாம் ஒரு தலையாகவுடைய நீங்கள் தீவினையாளரைப்போல நுமதிடத்தைக்கழிந்து வருவதற்குக் கருதியதென்னோவென்று கேட்பவென்க.

பெருமகன் - அருகதேவன். திருமொழி - அவனருளிச்செய்த ஆகமம். உறுகணாளர் - மிடியாளரென்பாருமுளர். கடைகழிதல் இவர்க்கு மரபன்மையிற் கழிந்தென்றார்.

இவ்வும்மைகள் எண்ணுக்குறித்தனவெனினும் சிறப்புப்பொருண்மை தோன்றநின்றன.

ௌ0 - ௯க. உரையாட்டில்லை...............வேட்கையேன்

(இ - ள்.) மிக்க தவத்தினையுடையீர், இவ்வினாவிற்கு ஓர்உத்தரமில்லை; ஆயினும் யான் கருதியதொன்றுண்டு; அதுயாதெனின், மதுரையாகிய மூதூரிற் சென்று நிருமித்தபொருளைத் தேடக்கடவோமென்னும் வேட்கையையுடையேனாயினேனென்று சொல்லவென்க.

முன்னர்க்காதையில் [2] "சென்ற கலனோ, டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன்" என்றானாகலின், அதனை வரைபொருளென்றான். இனி நியாயத்திற்

[1] "இடுக்கண்வருங்கானகுக" திருக்குறள், கூஉக. [2] சிலப்பதிகாரம், கூ: எச - ரு.

றேடும்பொருளெனினுமமையும்; அன்றி, இதற்கு இத்துணைப்பொருட்கு மேற் பட்டதே தானம்பண்ணக் கடவேனென வரைந்தபொருளென்பாருமுளர். என வென ஒருசொல்வருவிக்க:

இனிக் கவுந்தியடிகள் கூறுவார்:—

ருஉ - ௪. பாடகச்சீறடி.........அறிகுநர் யாரோ

(இ - ள்.) இனி அங்ஙனங் கடக்குமாயின், இவள்சீறடிகள் பருக்கையாகிய பகையை வெல்லமாட்டா; ஆதலால் நீர் காடு நாடுமென்னும் இவ்வழியைக்கடத் தற்குஇவள் செவ்வி யுற்றதன்று; இனி ஊழ் என்செய்துமுடிக்குமோ? அதனை அறிவாராரென்றாரென்க.

என்றகருத்து: அடி பரற்பகையுழவா; வழி காடிடையிட்டநாடு; இவள் அதற்கேற்றதன்மையளல்லள்; இனி ஊழ் என்செய்யுமோ? இதனை யாரறியவல் லாரெனப் பரிவுறல்தோன்றநின்றது.

௫௫. உரிய தன்றீங் கொழிகென வொழியீர்:—(இ - ள்.) இவையே யன்றியும் குடிப்பிறப்பிற்கும் இவளை ஒருங்குகொண்டு சேறல் ஏலாதாகலின் இனிச் செலவை ஒழியென்ற யாமொழியவும் ஒழிகின்றிலீராயினீரென்று மென்க.

ஒழிகென வொழியீரென்பதற்கு இவர்க்கு எதிர்வதறிந்து கூறினாரெனின், [1]"வயந்தரு சிறப்பிற கவுந்தி.........உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்த்த தாம்" என நீர்ப்படையுள் மாடலன் கூறுதலானும், அடைக்கலக்காதையில், [2]"தகைக்குல வாணர், அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு, கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவ, துடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவு, மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்" எனவும், [3]"தாயு நீயே யாகித் தாங்கு" எனவும், [4]"மிகப்பே ரின்பந் தருவது கேளாய்" எனவும் ஒருபொழு திற்கு இத்துணை ஒப்படையெல்லாம் கூறவேண்டாவாகலானும் இவர்க்குத் தவப் பயனாலே சபித்தலன்றிக் காலவுணர்ச்சியின்மையுணர்க.

ருசு - சுஎ. மறவுரை நீத்த.........தீர்த்தேனென

(இ - ள்.) மறவுரைகளை நீத்திருக்கும் குற்றமற்ற பொருட்பயனையுடைய வர்தம் நூலைக்கேட்டு அந்த ஆகமப்படியே அறிவினையெய்துதற்குத் தெற்கின் கணுள்ள தமிழ்நாட்டின்கண்ணதாகிய குறைதீர்ந்த மதுரைக்குப்போதற்கு முன்னே ஒருப்பட்ட உள்ளமுடையேனாதலின், யான்போதுவேன்; நீரும் போது மினென்ற கவுந்தியடிகளைக் கையாற்றொழுது நாவானேத்தி, அடிகளே! நீரே இங் ஙனம் அருள்செயவீராயின், இவ் வளைபொருந்திய தோளினையுடையாளுடைய துயரெல்லாம் இப்பொழுதே போக்கினேனன்றேயென்று சொல்லவென்க.

நீயிரே இதுசெயவீராயினென்றது ஒரு வழக்கு. ஏகாரத்தை இசைநிறை யாக்கலுமொன்று. தொடி - வளையு; [5]"தொடிக்கட் பூவை" என்றாராகலின்.

---

[1] சிலப். உஎ: எ௪ - அ௫.
[2] „ கரு: கஉசு - கூ௦.
[3] „ „ ககசு.
[4] சிலப். கரு: க௫௦.
[5] சீவகசிந்தாமணி, கூகஉ.

கூரு

நீத்தென்றும் பாடம்.

சுஉ - ௪. கோவலன் காணாய் ...பலகேண்மோ

(இ - ள்.) கோவலனே! நாம் போவதாகவுட்கொண்ட இக்கெறியிடத்து வருத்தத்தைத் தருவன எவ்விடத்தும் பலவுள; அவற்றை நீயறியாய்; ஆதலால், யான் சொல்லக் கேட்பாயாகவென்றாரென்க.

காணாய் - நீ முன்பு அறியாய். இக்நெறி - வடகரைவழி. மோ, முன்னிலை யசை.

சுரு - எக. வெயினிறம் பொறாஅ.........காட்டினுங் காட்டும்

(இ - ள்.) வெயிலினது நிறத்தைக் கண்ணாற்பார்க்கவும் பொறாத இம்மெல்லிய இயல்பினையுடையாளைக்கொண்டு நாம் பூப்பயிலும் தண்டலையூடே போகக் கடவேமென்போமாயின்; அவ்விடத்து சிலம்பினைக்கும்படி இடங்கொண்டு கீழ் வீழ்ந்த வள்ளிக்கிழங்கை அகழ்ந்துகொண்டகுழிகளைச் சண்பகமரங்களினுறைத்த பூந்தாதுசேர்ந்தபொங்கர் பொய்க்குழிப்பம்வித்து அவ்விடங்களை அறிந்து பாதுகாத்துச்செல்லாதார்க்கட்குச் செயலறுதியாகிய துன்பத்தைக் காட்டுதலைச் செய்யினுஞ் செய்யுமென்றாரென்க.

பொங்கர் - சண்பு வாடற்பூ. அதுபோர்த்தலாற் பொய்யறைப் படுத்தென்றார்; [1] "பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" என்ப மேலும். கையறுதுன்பம் - மீளாத்துன்பமுமாம். காட்டல் - தருதல். பொங்கர் படுத்துக் காட்டு மென்க.

எஉ - ரு. உதிர்பூஞ் செம்மலின்.........முட்டினு முட்டும்

(இ - ள்.) அங்ஙனமுதிர்ந்த செம்மற்பூ மறைத்த குழியுள்ளவழி நாடுதற்கு நிலைநோக்கி ஒதுங்கிச்செல்வோரை முற்றிப் பழுத்து விண்டு தேனொழுகும் பலாப்பழங்கள் தாழ்ந்தகோட்டின்கணிருந்து பகைபோல முட்டுதலைச் செய்யினுஞ் செய்யுமென்றாரென்க.

இனித் தேமென்பதனை இனிமையாக்கித் தெங்கம்பழம் முட்டுமெனினு மமையும்; பழம்பகையாயெனப் பண்பொட்டுவிரிக்க.

முட்டினுமுட்டுவரென்றது பாடமாயின், கழிவோர்செய்யினுஞ்செய்வா ரென்க; உம்மையை ஐயவும்மையாக்கிப் பொருளுரைக்க. படர்குவமெனினே யெனக் கழிவோர்கருத்தைக் கொண்டு கூறினார், உலகியலாகலான்.

எசு - ௯. மஞ்சளுமிஞ்சியும்........பகையுறுக்கும்

(இ - ள்.) அவ்வாறன்றி வெள்ளிடைப் போவோமெனின், ஆண்டு மஞ்சள் முதலியன தம்மிற் தலைமயங்கிய பிணக்கத்தையுடைய தோட்டங்களிற் பாத்தி தோறும் பலவின் செஞ்சுளைகளினுள்ள வெண்காழாகிய பருக்கைகள் இவள் மெல்லடிக்குப் பகையாய் உறுத்தலைச் செய்யுமென்றாரென்க.

வலயம் - பாத்தி. வலயத்தோடு பரலும் பகையாயுறுக்குமெனினுமமையும்; உறுக்கும் - உறுத்தும்.

[1] சிலப்பதிகாரம், வேட்டுவவரி, "செம்பொன்வேங்கை"

கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு
வான வூர்தி * யேறினண் மாதோ
கானமர் புரிகுழற் கண்ணகி தானென்.

---

## வெண்பா.

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை † திண்ணிதாற்—‡ றெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.

## கட்டுரை.

[1] § முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
[2] பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி || சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தம
வையைப் பேரியாறு வளஞ்சுரந் தூட்டலும
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலு
மாரபடி சாத்துவதி யென்றிரு விருத்தியு
நேரத் தோன்றும் வரியுங் குரவையு
** மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்பொ
டொன்றித் தோன்றுந் †† தனிக்கோ ணிலைமையும
வடவாரியர் ‡‡ படைகடந்து
தென்றமிழ்நா டொருங்குகாணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
னரைசு கட்டிலிற் §§ றுஞ்சிய பாண்டிய
னெடுஞ்செழியனொ டொரு பரிசா
நோக்கிக் கிடந்த
மதுரைக் காண்ட முற்றிற்று.

---

## இரண்டாவது, மதுரைக்காண்டம் முற்றிற்று.

---

'தெய்வந்'—மண்ணகமாதர் - உலகத்துக் கற்புடைமகளிர். விண்ணக மாதர்க்கு விருந்தானள்; ஆதலாஸ் தெய்வந்தொழுகை திண்ணிதெனக.

---

[1] குறள், ௫௫. [2] புறநானூறு, ௩௫. [3] "பழவிறன்மூதூர்" மணி. ௭: ௬௯.
(பி - ம்.) * 'ஏறினள்கானமர்' † 'திண்ணமாற்' ‡ 'தெய்வமா, மண்' § 'முடியுடை' || 'சிறப்பின் வானவர் வரவும் வையைப்பேரியாற்று' ** 'என்றிவ வனைத்தும்' †† 'தன்கோன்' ‡‡ 'படைதந்து' §§ 'துஞ்சிய நெடுஞ் செழியனொ டொருபரிசா'.

மூன்றாவது

# வஞ்சிக்காண்டம்.

## ௨௪. — [1] குன்றக்குரவை

[2] உரைப்பாட்டுமடை.

குருவியோப்பியுங் கிளிகடிந்துங் குன்றத்துச்சென்று *வைகி
யருவியாடியுஞ் சுனைகுடைந்து † மலவுற்று வருவேமுன்
மலைவேங்கை நறுநிழலின் வள்ளிபோல்வீர் மனநடுங்க
முலையிழந்து ‡ வந்துநின்றீர் யாவிரோவென முனியாதே
௫. மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந் துருத்தகாலைக்
கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன் யானென்று
ளென்றலு மிறைஞ்சியஞ்சி யிணைவளைக்கை யெதிர்கூப்பி
நின்ற § வெல்லையுள் வானவரு நெடுமாரி மலர்பொழிந்து
குன்றவருங் கண்டு || நிற்பக் கொழுநனொடு கொண்டுபோயின
௧௦. ரிவள்போலும் ¶ நங்குலக்கோ ரிருந்தெய்வ மில்லையாதலிற்

௧. குன்றத்துச்சென்று தங்கிக் குருவியோப்பியுமெனக.

௨. வள்ளி - கொடி; தங்கள் வள்ளியென்கின்ற பெண்ணுமாம்; என்றது, குமரவேள் தேவியை.

௪. நின்றீர், யாவிர் இவை யாகத்தகக் கூறினார் முனியாதே - நீவிர் கேட்டதற்கு வெகுளாதே.

௫. மணமதுரை [3] கலியாணமதுரை.

௯. போயினார், முற்று.

முன் தேவருடன் போனபடியை விரியக்கூறின்று இது

[1] குன்றக்குரவை: நற். ௨௭௬, அகநா. ௨௧௨, முருகு. ௧௯௬-௭; மதுரை. ௬௧௫; மலைபடு. ௩௨௦-௨௨; திருச்சிற். ௧௨௭.

[2]. உரைப்பாட்டுமடை - உரையாகிய பாட்டை இடையேயுடையது: சிலப். ப. ௪௪௧.

[3]. மணமதுரை - நறுமணத்தையுடைய மதுரையுமாம்; (சிலப். ௧௩: ௧௬௬ - ௬௮ பார்க்க); "நன்றவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத், தென்ற லசைவரூஉஞ் செம்மற்றே யம்மதின், குன்றத்தாற் கூடல் வரவு" (பரி. ௮.) மணமதுரையோடரசுகேடுற: "ஓட்டேனரசோ டொழிப்பேன் மதுரையும்" சிலப். ௨௧: ௪௭.

(பி - ம்.) * 'வைகியுமருவி' † 'அலவுற்றும் வருவேம்' ‡ 'வந்துநின்ற நீரியாவிரோ' § 'எல்லையில்' || 'நிற்கவே கொழுநனொடுங்கொண்டு' ¶ 'நங்குலத்துக்கோரிரு'

* சிறுகுடியீரே சிறுகுடியீரே
தெய்வங்கொள்ளுமின் சிறுகுடியீரே
நிறங்கிளர் அருவிப் பறம்பின் றாழ்வரை
நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே
தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
[1] கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்
[2] குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்
[3] பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை † நிறுமின்
[4] பரவலும் பரவுமின் ‡ விரவுமலர் தூவுமி
னொருமுலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே

கொளுச்சொல்

ஆங்கொன்று காணு யணியிழா யீங்கிதுகா
[5] ணஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியற்
சிந்துரச் சுண்ணஞ் செறியத்தூய்த் தேங்கமழ்ந்
திந்திர வில்லி னெழில்கொண் டிழுமென்று

கரு. பறம்பின்றாழ்வரை-நெடுவேள்குன்றமாகிய பறம்பின தாழ்வரையில்.
கச-ரு. வேங்கைக்கீழ் ஒரு தெய்வமாகப் பண்ணிக்கொள்ளுமின்
கசு. தொடுத்தல் - வாசித்தல.
கஎ. கோடு - கடமாக்கொம்பு. கொடுமணி - ஓசைகடிதான மணி.
கக.காப்பு-சுற்றுமதில் கடை-வாயில சுற்றுமதிலிட்டுவாசலும்செய்ம்மின்
(உஉ) வளந்துஞ்சாது சுரக்கவென்று (உக) நங்கைக்குச் ..(கக) செயமி னென்று முன்னே கூட்டுக

கொளுச்சொலென்றது, மேற்சொல்லுகின்ற மூன்று பாட்டின் சொற் களைப் போதர்........இப்பாட்டின கருத்தென்றுமாம்

"ஆங்கொன்று"—ஆங்கொன்று காணுயென்றது, தூரநின்று. இட்டச் சென்று, ஈங்கிதுவென்றாள். இதுவென்றாள், கண்ணகி அங்கேவர்தளவிலே மழைபெயதலால் விழுகிற அருவியை அவ்வருவி தூங்கக்கண்டு தங்களையணுக வந்தபடியே. ... ... செறிய - செறியாநிற்க ஆடுதுமே: ஏகாரம்,

---

[1] "கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி" முருகு. உசசு.
[2] "நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி" முருகு. உகக.
[3] பூப்பலி: "மலர்ப்பலி தூஉய்", "பூப்பலிசெய்துகாப்புக்கடைநிறுத்தி" (சிலப். உ௫: ௯, உகக); "பூப்பலிவிட்டகடவுளை" கலி. கக.
[4] "பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்" குறிஞ்சி. ௯.
[5] "அஞ்சனத் திரளு மணியரி தாரமும்" சிலப். உ௯ : ௭௦.
(பி-ம்) * 'சிறுகுடீரே' † 'நிறுத்துமின்' ‡ 'விரைமலர்.

வந்தீங் கிழியு மலையருவி யாடுதுமே
யாடுதுமே தோழி யாடுதுமே தோழி
யஞ்சலோம் பென்று நலனுண்டு *நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி யாடுதுமே

எற்றொன்றுங் காணேம் புலத்த லவர்மலைக்
கற்றீண்டி வந்த புதுப்புனல்
கற்றீண்டி வந்த புதுப்புனன் மற்றையா
ருற்றாடி னோந்தோழி நெஞ்சன்றே
என்னொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
பொன்னாடி வந்த புதுப்புனல்
பொன்னாடி வந்த புதுப்புனன் மற்றையார்
முன்னாடி னோந்தோழி நெஞ்சன்றே
யாதொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
போதாடி வந்த புதுப்புனல்
போதாடி வந்த புதுப்புனன் மற்றையார்
மீதாடி னோந்தோழி நெஞ்சன்றே

பாட்டுமடை

உரையினி மாதரா யுண்கண் சிவப்பப்
புரைதீர் புனல்குடைந் †தாடினோ மாயி
[2] னுரவுநீர் மாகொன்ற ‡வேலேந்தி யேத்திக்
குரவை தொடுத்தொன்று §பாடுகம்வா தோழி

தேற்றம். அவன் கொடுமை கிடக்கச்செய்தேயும் அவனுடைய மலையருவியை ஆடவேண்டிற்றேயென்றாள். அஞ்சலோம்பு - அஞ்சுதலைப் பரிகரி.

"எற்றொன்றும்"—..........................அவர் செய்த கொடுமையால் நாம் அவர்மலையின்வந்த புதுப்புனலோடு புலத்தற்குச்சிறிதும் காரணமில்லை. மற்றையாரென்றது, அருவி யாடுவாருள் தன்னையொழிய முன் அந்நீரிற் குளித்த மகளிரை. தனக்கு முற்படவாடினவரோடு நெஞ்சுதான் வேறுபட்டுப் புலத்தற்குக் காரணம் என்னென்றாள். அன்றேயென்றது, இசைநிறைக்கிளவி.

"என்னொன்றும்"—எவனொன்றும், விகாரம்.

'எற்றொன்றும்' என்பதுமுதலாக மூன்றும் சிறைப்புறம்; தோழிக்குத் தலைமகள் சொல்லியது; முன்னிலைப்புறமொழியுமாம்.

"உரையினி"—உரையினி - இனிச்சொல்.

---

[1] "பெண்டிர் நலம்வௌவித் தண்சாரற் றாதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" கலி. ௪௦.

[2] "உரவுநீர் மாகொன்ற, வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்" கலி. உஎ.

(பி - ம்.) *'நல்காதார்' †'ஆடினம்' ‡ 'வேலேத்தி' § 'பாடுதும்யாம், பாட்டு, மடை சீர்கெழு'

சீர்கெழு [1] செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று
[2] மேரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
[3] பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே

அணிமுகங்க ளோராறு மீராறு கையு
* மிணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ண
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே

† [4] சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
திருமுலைப்பா லுண்டான் றிருக்கைவே லன்றே
‡ வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
[5] குருகு பெயர்க்குன்றங் கொன்ற நெடுவேலே

"சீர்கெழு"—செந்தில் - திருச்செந்தில். செங்கோடு - திருச்செங்கோடு. வெண்குன்றம் - சுவாமிமலை. ஏரகம் - ......சூர் மா - சூரனாகியமா. சுடரிலைய; அ, இடைச்சொல்; சுடரிலை வேல, இறைவன் வேலென்க.

"அணிமுகங்கள்"—இவ்வடிவு பிறர்க்கு இல்லாமையால் பிறரொப்பில்லாதான. [6] பிணிமுகம் - மயில்.

"சரவண"—சரவணப்பூம்பள்ளியறை-சரவணப் பொய்கையில் தாமரையாகிய பள்ளியறை அறுவர்-கார்த்திகையார். திகிரிகோலவுணன் - மலையைச் சூழவரும் அவுணன் பிளந்து பிளக்க குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்ச பருப்பதம். [பராயது.

"சீர்கெழுசெந்தில்" முதலிய மூன்றும் வரைவுமுடிவதாகத் தெய்வம்

[1] "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பு" (முருகு. ௧௨௫); "முருகன் தீம்புன லலைவாய்", ("மையுண்மாலை" தொல். களவு. சூ. ௨௩-ந. மேற்.) "திருமிகு விளக்கி னலைவாய்ச் செருமிகு சேய்" (அகநா. ௨௬௬); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை" (புறநா. ௫௫); "நறுஞ்செந்தின்மேய வள்ளிமணாளற்குத் தாதைகண்டாய்" (தே. மறைக்காடு)

[2] ஏரகம்: "ஏரகத் துறைதலு முரியன்" (முருகு. ௧௮௯) என்றவிடத்து ஏரகம் - மலைநாட்டகத்ததொருதிருப்பதியென்றார், நச்சினார்க்கினியர்; பத்து. ப. ௪௨ - பார்க்க.

[3] "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" (முருகு. ௪௫ - ௬); "பாரிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு" (பரி. ௫); "பார்முதிர் பனிக்கடல்" பாகவத. ௯: கருதத்தமன் ௫௦.

[4] சரவணப்பூம்பள்ளி: "நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை,......அறுவர் பயந்த வாறமர் செல்வ" (முருகு. ௨௫௩ - ௫); "கடவு ளொருமீன் சாலினி யொழிய, வறுவர் மற்றையோரும்......நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப், பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்" பரி. ௫.

[5] "குருகுபெயர்க் குன்றங் கொன்றோன் மடவன்" (சிலப். ௨௪); "குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து, மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை" (பரி. ௫); "குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து" (முருகு. ௨௬௬); "குருகுபெயர்க் குன்றங் கொன்றோன்" (மணி. ௫: ௧௧); "குருகுபெயர்க் குன்றத் துடல்பக வெறிந்த, நெடுவேற் கடவுட்கு" கல். "பொருப்புவளன்"

[6] 'பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" (கல். எ.) பிணிமுகம்-முருகக்கடவுள் ஊரும் யானையுமாம்; "சேயுயர் பிணிமுக மூர்ந்து" (பரி. ௫); "பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. ௫௬); "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. ௨௪௭);

(பி - ம்.) * 'இணையன்றி' † 'சரவணப் பள்ளியிலைசத்தாய்மார்' ‡ 'வருதிகிரியோ லவுணன் மார்பம்' 'திகிரியோனவுணன்'

பாட்டுமடை

இறைவளை நல்லா யிதுநகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க
வறியாண்மற் றன்னை யலர்கடம்ப னென்றே
வெறியாட றான்விரும்பி வேலன்வரு கென்றாள் *

ஆய்வளை நல்லா யிதுநகை யாகின்றே
மாமலை வெற்பனோய் தீர்க்கவரும் [1] வேலன்
வருமாயின் வேலன் மடவ னவனிற்
குருகு பெயர்க்குன்றங் கொன்றான் மடவன்

செறிவளைக்கை நல்லா யிதுநகையா கின்றே
வெறிகமழ் வெற்பனோய் தீர்க்க வரும்வேலன்
வேலன் மடவ னவனினுந் தான்மடவ
[2] னாலமர் செல்வன் புதல்வன் வருமாயின்

நேரிழை நல்லாய் நகையா மலை [3] நாடன்
மார்பு † தருவெந்நோய் தீர்க்க வரும்வேலன்
தீர்க்க வரும்வேலன் றன்னினுந் தான்மடவன்
[4] கார்க்கடப்பந் தாரெங் கடவுள் வருமாயின்

பாட்டுமடை

வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து
நீலப் பறவைமே னேரிழை தன்னோடு
மாலமர் செல்வன் புதல்வன் வரும்வந்தான்
[5] மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே

'இறைவளை நல்லாய்' முதல், 'ஏறியாம்பாட' இறுதி அறத்தொடுநிலை.

"செறிவளை"—வெற்பனோய் - வெற்பனால்வந்த நோய்.

"வேலனார்"—நீலப்பறவை - மயில்

[1] "வேலன் வேண்ட வெறிமனை வந்தோய், கடவு ளாயினு மாக, மடவைமன்ற வாழிய முருகே" நற். ஙச.

[2] "ஆலமர் செல்வன் புதல்வன்வரும்" (சிலப். உச); "ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்", "ஆலமர் செல்வ னணிசான் மகன்" (கலி. அக, அங); "ஆல்கெழு கடவுட் புதல்வ" (முருகு. உருக); ஆலமர் செல்வன் மகன்" மணி. ங : கசச.

[3] "நாடன் மார்புதர வந்த படாமலி யருநோய்" நற். ஙச.

[4] கார்க்கடப்பந்தார் - கார்காலத்திற்குரிய கடம்பின்மாலை : "கார்கோண் முகந்த ..., இருள்படப் பொதுளிய பராரை மராஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்" (முருகு. எ - கக) "கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி......முருகே" (நற். ஙச); "கார்நறுங் கடம்பின்......தெரியற், சூர்நவை முருகன்" (புறநா. உங); "காரலர் கடம்பன்" மணி. ச. சக.

[5] "மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே" சிலப். உச; "பாலகெமா" (பி - ம்.) * 'பாட்டுமடையாய்வளை' † 'தருநோய்தீர்'

கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதன்
மயிலியன் மடவரன் மலையர்தம் மகளார்
* செயலைய மலர்புரை திருவடி தொழுதே
மயன்மண மொழி † யரு ளவர்மண மெனவே

மலைமகண் மகனைநின் மதிநுதன் மடவரல்
குலமலை யுறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுணின் னிணையடி தொழுதேம்
[1] பலரறி மணமவர் படுகுவ ரெனவே

குறமக ளவளெம குலமக ளவளொடு
மறுமுக வொருவநின் னடியிணை தொழுதேந்
[2] ‡ துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்
பெறுகநன் மணம்விடு பிழைமண மெனவே

பாட்டுமடை

[3] என்றியாம் பாட மறைநின்று கே
மன்றலங் கண்ணி மலைநாடன் போவான்முன்
சென்றே னவன்றன் றிருவடி கைதொழுது
நின்றே னுரைத்தது கேள்வாழி தோழி

"கயிலை"—மகனை: ஐ, இடைச்சொல். அயன்மணம் - பிராசாபத்தியம். ஒழி - இதனை விலக்குவாய்.

"மலைமகள்"—பலரறிமணமென்றா, இதற்குமுன்பு களவாதலால். படுகுவர் - உடன்படுகுவாராக அவரென்றது தலைவனை.

"குறமகள்"—துறை - நீர்த்துறை; [4] "யாறுங்குளனும" என்றாராதலின். நின் திருவடிதொடுநரென்றது, சூளுறுந்தலைவனை.

"என்றியாம்"—மறைநின்று - மறையச் சிறைப்புறமாகநின்று. சென்றேன் - சென்றுநின்றேன்; நின்றேன் - நின்றநான்.

[1] "நேரிறை முன்கைபற்றி நுமர்தர, நாடறி நன்மண மயர்கம்" (குறிஞ்சி. உகக-உ); "பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து" நாலடி. அகூ.

[2] "ஆலமுங்கடம்பு நல்யாற்று நடுவுங், கால்வழக் கறுநிலைக்குன்றமும் பிறவு,மவ்வவைமேய வேறுவேறு பெயரோ, யெவ்வயி னோயு நீயே" (பரி - ச); "துறையு மாலமுந் தொல்வலி மராமு, முறைபுளி பராஅய்" (கலி - கoக.)

[3] "குன்றக்குரவையுள், 'சீர்கெழுசெந்தில்' என்னுந்தாழிசைமுதற் பல அடுக்கி வந்து பின்னர், 'என்றியாம், பாட......கேட்டு' என்று அடக்கியற் பொருள்பெற்று முடிந்தவாறு காண்க." தொல். செய். சூ. கசக - ந.

[4] திருமுருகாற்றுப்படை, உஉச.

(பி - ம்.) * 'செயலைமென்' † 'அருள்பலர்மணம்' ‡ 'துறையுறைமிசை நினதிருவடிதொழுமவர்பெறுக'

கடம்பு சூடி யுடம்பிடி யேந்தி
மடந்தை பொருட்டால் * வருவ திவ்வூ
ரறுமுக மில்லை யணிமயி லில்லை
குறமக ளில்லை செறிதோ ளில்லை
கடம்பூண் டெய்வ மாக நேரார்
மடவர் மன்றவிச் சிறுகுடி யோரே

## பாட்டுமடை.

என்றீங்
அலர்பாடு பெற்றமை யானுரைப்பக் கேட்டுப்
புலர்வாடு நெஞ்சம் † புறங்கொடுத்துப் போன
மலர்தலை வெற்பன் வரைவானும் போலு
முலையினான் மாமதுரை கோளிழைத்தாள் காதற்
றலைவனை வானோர் ‡ தமராருங் கூடிப்
பலர்தொழு பத்தினிக்குக் காட்டிக் கொடுத்த
நிலையொன்று பாடுதும் யாம்

பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகம்
பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகங்
கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுகந்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுங்கால்
[2] மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே

"கடம்பு"—இப்படிச்சூடி ஏந்தி இவ்வூர் வருவது, தன்னை முருகனென்று கண்டார் கருதுதல்வேண்டி ......இச்சிறுகுடியோர் தெய்வமாக உடன்படார் ஆதலால், அறியார்; மடவர்-அறியார். அன்றி, இச்சிறுகுடியோராதலால்,...... சொல்லுமாறு: அறுமுகமில்லை; அணிமயிலில்லையென்று சொல்லுவார்களென்று வேறுகாட்டினுள்; தலைமகன் கடம்புசூடி உடம்பிடியேந்தித் தன்னைக் குமரனென்று பிறர்கருதவந்த காரணம், [3] "பண்டைத்தன் மணங்கமழ்தெய வத்திளநலங் காட்டி" என்றாராதலால்.

"அலர்பாடு"—புலர்வாடுநெஞ்சம்-புலருநெஞ்சம். புறங்கொடுத்துப்போன-தன்பின்னே கிடக்கப்போன; ஒழியப்போனவென்றுமாம். தமராரும் கூடி-தமரெல்லாருங்கூடி. நிலை - தன்மை.

"பாடுகம்"—அத்தன்மையினை நாம் பாடுமிடத்து இதனை வேண்டிக் கொள்ளுவோமென்றார்.

[1] "பாடுகம் வாவாழி தோழி" கலி. சக.
[2] "மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே" சிலப். உச; "வேலனார்வந்து"
[3] திருமுருகாற்றுப்படை, உஅக-கஂ

(பி - ம்.) * 'வருவதிவ்வூர்க்கடம்பூண்......குடியோரே யறுமுகமில்லையணி...... லில்லை' † 'புறக்கொடுத்து' ‡ 'தமராகக்கூட்டிப்'

பாடுற்றுப்
பத்தினிப் பெண்டிர் பரவித் தொழுவாளோர்
பைத்தரவல் குல்நம் பைம்புனத் துள்ளாளே
பைத்தரவல் குல் கணவனை வானோர்க
ளுய்த்துக் * கொடுத்து முறையோ வொழியாரே
வானக வாழ்க்கை யமரர் தொழுதேத்தக்
† கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை ‡ மறுதரவோ வில்லாளே

மறுதர வில்லாளை யேத்திநாம் பாடப்
[1] பெறுகதில் லம்ம § விவ்வூரு மோர்பெற்றி
பெற்றி யுடையதே பெற்றி யுடையதே
பொற்றொடி மாதர் கணவன் மணம்காணப்
பெற்றி யுடையதிவ் வூர்

என்றியாங்
கொண்டு நிலைபாடி யாடுங் குரவையைக்
கண்டுநங் காதலர் || கைவந்தா ரானா
துண்டு மகிழ்ந்தானா வைகலும் வாழியர்
வில்லெழுதிய விமயத்தொடு
[2] கொல்லி யாண்ட [3] குடவர் கோவே.

உச — குன்றக்குரவை முற்றிற்று.

பாடுற்று - பெருமையுற்று

"பத்தினி" — வானோர் கொடுத்தபினபும் அவளைப் புகழ்தலொழியார்.

"மறுதரவு" — மறுதரவு-மீட்சி இவ்வூரும் ஒருவிரதம்பெறுக. கணவன் மணம் - வரைவு

"கொண்டுநிலை" — [4] கொண்டுநிலை-பொருளைக் கொண்டுநிற்குநிலை. கைவந்தார் - அவன் பிரசாதத்தாலே நம்வழியிலே புகுந்தார். உண்டு - வீரபானத்தையுண்டு. ஆனாவைகலும் - எஞ்ஞான்றும் வாழ்வானாக

இவ்வுறுப்புக்களையுடைய கொச்சகப்பாத் தலைமகட்குத் தோழி வரைவு கூறியது.

---

[1] "பெறுகதிலம்மவூரே" குறுந். கச.

[2] "கொல்விற் பொருந" (பதிற். எக); "முன்னூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வில், லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா - உ0௯), "ஓங்கு கொல்லியோர் அடுபொருந" (புறநா. உ௨.) என்பவற்றால் கொல்லிமலை சேரபரம்பரையினர்க்குரித்தாதல்காண்க.

[3] "குடவர் கோவே கொடித்தேரண்ணல்" பதிற். ௯௰.

[4] கொண்டுநிலை - ஒருவகைச் செய்யுளென்பர்; "குரவை தழீஇயா மாடுங் குரவையுட், கொண்டுநிலை பாடிக்காண்" (கலி. கக.) என்பதன் உரையைப்பார்க்க.

(பி - ம்.) * 'கொடுத்தவுரை' † 'கானறு' ‡ 'மறுதரலோ' § 'இவ்வூர் பெற்றியுடையதே' || 'கைவந்தார், குன்றே'

# இருபத்தைந்தாவது

# காட்சிக்காதை.



[1] மாநீர் வேலிக் கடம்பெறிந் [2] திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்
[3] திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளித்
[4] துஞ்சா முழவி னருவி யொலிக்கு
மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப்
* பைந்தொடி யாயமொடு பரந்தொருங் கீண்டி
[5] வஞ்சி முற்ற நீங்கிச் செல்வோன்
வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்
பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பு

க. மாநீர் வேலிக் கடம்பு - இருண்டநீரை வேலியாகவுடைய கடம்பு.

ச. இலவந்தி - நீராவி.

ரு. இளங்கோவேண்மாள் - பெயர்; 'நன்னன்வேண்மாள், உதியன் வேண் மாள்' என்பனபோல; வேண்மாளுடனிருந்து, இளங்கோவை அருளிப்பாடிட் டென்றுமாம.

[1]. கடம்பெறிந்தமை: "வலம்படு முரசிற் சேர லாதன், முந்நீ ரோட்டிக் கடம் பறுத் திமையத்து, முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து", "சால்பெருந் தானைச் சேரலாதன், மால்கட லோட்டிக் கடம்பறுத் தியற்றிய, பண்ணமைமுரசு" (அகநா. கஉஎ, ௯சஎ); "பலர் மொசித் தோம்பிய திரள்பூங் கடம்பின், கடியுடை முழுமுத றுமிய வேஎய், வென்றெறி...சேர லாத", "அரசுதலை பணிப்பக், கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே", "மாக்கட னிக்கிக், கடம்பறுத் தியற்றிய, வலம்படு வியன்பணை... தொடித்தோளியவ", "இருமுந்நீர்த் துருத்தியுள், முரணியோர்த் தலைச்சென்று, கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பி, னெடுஞ்சேர லாதன்" (பதிற். கக, கஉ, கஎ, உ0)

[2]. இமயத்து விற்பொறித்தமை: "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்து" (சிலப். உ௫: ககஅ); 'இமயம் விற்பொறித்து" (பதிற். உ-ஆம் பத்துப்பதிகம்) "ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்த, வெஞ் சின வேந்தரைப் பிணித்தோன் வஞ்சி" (அகநா. ககூசு.)

[3]. "வதுவை வேண்மாள் மங்கல மடந்தை" சிலப். உஅ: ௫க.

[4]. "முழவின்னிசைமூரிமுழங்கருவி" சீவக. கககூ

[5]. "வளந்தலைமயங்கிய வஞ்சி முற்றம்" சிலப். உ௫: கச.

(பி - ம்) * 'பஞ்சடியாயமொடு'

யிலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவு
மரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி
யொருநூற்று நாற்பதி யோசனை * விரிந்த
பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று
கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகந் திலக நறுங்கா ழார
† முதிர்பூம் பரப்பி னொழுகுபுன லொளித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் ‡ பாட
[1] நெடியோன் மார்பி லாரம் § போன்று
பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை
யிடுமண லெக்க ரியைந்தொருங் கிருப்பக்
குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியுந்
தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியு
நறவுக்கண் ணுடைத்த குறவ || ரோதையும்
[2] பறையிசை யருவிப் பயங்கெழு மோதையும்
புலியொடு பொரூஉம் புகர்முக வோதையுங்
[3] கலிகெழு மீமிசைச் சேணோ னோதையும்

---

௧௪. அரங்கு - நாடகசாலை. பள்ளி - மண்டபம்.

(௩) செங்குட்டுவன் (௭) மலைகாண்குவமென்றுசொல்லி (௧௧) இந்திரன் (௧௩) பெயர்வோன்போன்று.

௧௨ - ௩. பூங்காமுதலானவற்றை யானைமேலுள்ளவாகநிருமித்து.

(௧௩) களிற்றிலே (௧௨ - ௪) இவற்றைப் பரப்பி (௧௩) பெயர்வோனென்க.

(௧௭) கோங்கமுதலியனவுதிர்ந்த (௧௯) பூம்பரப்பாற் புனல் ஒளித்து.

௨௨. மலையைவிலங்கியயாறு; பேர்யாறு; இஃது ஓர்யாற்றின்பெயர்.

௨௩. எக்கர் - எக்கரிடத்து இயைந்தொருங்கிருப்ப - மூவருங்கூடியிருப்ப.

௨௫. செவ்வேள் வேலன் - செவ்வேளுடைய வேலன; வேலன் - படிமத்தான்.

௩௦ சேணோன் - பரணின்மேலோன்.

1. "மாயோன் மார்பி னாரம் போல" தொல். செய். சூ. ௧௫, ௭௮-பேர். மேற்.

2. "பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந", "பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந" (புறநா. ௧௨௬, ௨௨௧); "பறைக்குர லருவி" பதிற். ௭௦.

3. "கலிகெழுமரமிசைச்சேணோன்" குறிஞ்சி. ௪௦

(பி - ம்.) * 'விலங்கு பருமால் களிற்றிற் பெயர்வோன்' † 'முதுபூஞ்செம்மலி னொழுகுபுனல்' ‡ 'ஆர்ப்ப' § 'போலப்' || 'ஓதையும் புலியொடு'

பயம்பில்வீழ் யானைப் பாக ரோதையு
மியங்குபடை யரவமோ டியாங்கணு மொலிப்ப
வளந்துகடை யறியா வருங்கலஞ் சுமந்து
வளந்தலை மயங்கிய வஞ்சி * முற்றத்
திறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறைசுமந்து † நிற்குந் தெவ்வர் போல
யானைவெண் கோடு மகிலின் குப்பையு
மான்மயிர்க் கவரியு மதுவின் குடங்களுஞ்
சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியு
[1] மஞ்சனத் திரளு மணியரி தாரமு
மேலை வல்லியு மிருங்கறி வல்லியுங்
[2] ‡ கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையுங்
§ தெங்கின் பழனுந் தேமாங் கனியும்
[3] பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களுங்
காயமுங் கரும்பும் பூமலி கொடியுங்
|| கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையி னிருங்கனித் தாறு
மாளியி னணங்கு மரியின் குருளையும்
வாள்வரிப் பறழு மதகரிக் களபமுங்

௩௧. பயம்பு - யானையைப்படுக்குங்குழி ௩௨. ஒலிப்ப - ஒலியாநிற்க.

௩௩. ‘அளந்துகடை யறியா’ என்பது முதல் திறையிடுவார்க்கு அடை.

௩௮. மான்மயிராகிய வெண்சாமரை. மதுவின்குடம் - தேன்குடம்.

௪௨. கூவைநூறு - கூவைக்கிழங்கினீறு.

௪௪. பைங்கொடிப்படலை - பச்சிலைமாலை.

௪௫. காயம் - வெள்ளுள்ளி. பூமலிகொடி - பூங்கொடி.

௪௮. அணங்கு - குட்டி

௪௯. வாள்வரி - புலி. கரிக்களபம் - யானைக்கன்று.

[1]. “அஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியல்” சிலப். ௨௪. “ஆங்கொன்று”:—

[2]. “நூறெறிந் தொழுகிய கூவை” (மலைபடு. ௧௩௭); “பாவை விஞ்சியுங் கூவைச் சுண்ணமும்” பெருங். ௧. ௩௭: ௨௧.

[3]. “பைங்கொடி—பச்சிலைக்கொடி; எல்லாவற்றினும் பசுத்திருத்தலிற் பச்சிலை யென்று பெயர் பெற்றது; பச்சிலையென்றது சினைவினை முதன்மேலேற்றிப் பைங்கொடி யென்றார்” (முருகு. ௧௯௦-ந) என்பது ஈண்டு அறியற்பாலது.

(பி - ம்.) * ‘மன்றத்து’ † ‘நிற்குமன்னர்’ ‡ ‘கூவைநீறும்’, ‘கூலக்கிழங்குங்கொடி’ § ‘தெங்கம்பழனும்’ || ‘கருந்தாட்கமுகின்’

குரங்கின் குட்டியுங் [1] குடாவடி யுளியமும்
[2] வரையாடு வருடையு மடமான் மறியுங்
காசறைக் கருவு மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையு நாவியின் பிள்ளையுங்
கானக் கோழியுந் * தேன்மொழிக் கிள்ளையு
[3] மலைமிசை மாக்க டலைமிசைக் கொண்டாங்
[4] கேழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றங்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற † மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனை
ளெந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்க ணினைப்பினு மறியேம்
பன்னா ளாயிரத் தாண்டுவா ழியரென
மண்களி நெடுவேன் மன்னவற் கண்டு

௫0. குடாவடியுளியம் - பிள்ளைக்கரடி; திசைச்சொல்; கரடிக்குட்டி.
௫௨. காசறைக்கரு - கத்தூரிக்குட்டி. ௫௯. மன் - கணவன்.

[1]. குடாவடி—வளைந்த அடிகளையுடையது; மலைபடு. ௫0௧-௩.

[2]. வரையாடுவருடை-மலையிற் பாய்ந்து விளையாடுகின்ற வருடைமான்; "சிலம்பு பாய்வருடையொடு", "குன்றின்மேல்வருடை பாய்ந்துழக்கலின்" (சீவக. ௧௨௧௮, ௧௮௧௧); வருடைக்குக் கால்கள் முதுகிலுமுள்ளனவென்றும் கால்கள் எட்டென்றும் வேறு நூல்களால் தெரிகின்றன; "மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரை வாழ் வருடை வன்றலை மாத்தகர்" (மலைபடு. ௫0௨-௩) என்பதனுரையின் அடிக்குறிப்பைப் பார்க்க; "எட்டுக் காலுடையன வருடை; ஆறுகாலுடையன கழிப்பாம்பு" நீல. தரும. செய். ௫௪-உரை.

[3]. ௫௫-௬0. சிலப்பதிகாரம், பதி. ௩-௮.

[4]. ௫௭-௫௯. "குழிப்படு வேழக் கூன்மருப் பிரட்டையும், வரைப்படு தேனுஞ் சிலைப்படு கனியும், வீணைத் தண்டும் வேய்படு முத்துங், கானத் தகிலு மேனத் தெறியும், பொறிப்புலித் தோலு மறுப்பிய வூகமு, மந்திப் பிணையொடு மற்றவை பிறவுந், தந்திறை தந்து முந்து சிறைப் பட்ட, வற்ற காலத்தை முற்ற நோக்கி, யடியுறை செய் தொழிற் குடிமுதல் பிழைத்த, விருநிலம் பெயரினு மெம்மாட் டிலவெனப், பெருமகள் தமரொடு தெளிவனர் தேற்றி" பெருங். ௧. ௫௮: ௮௧-௯௯; மலைபடுகடாம், ௫00-ஆம் அடி முதலியனவும் இந்தப் பகுதியை ஒத்துள்ளன.

(பி - ம்.) * 'தேமொழி' † 'தன்மகிழநனொடுகூடின ளென்னாட்டாள்', 'கூடிப் போயினளெந்நாட்'

[1] கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த
[2] தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கு
மொண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாந்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்
[3] தீவினைச் சிலம்பு காரண மாக
வாய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்குஞ்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
யஞ்சி லோதி யறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டது
[4] மரிமா னேந்திய வமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
[5] றயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்

சுரு. கண்களிமயக்கம் - கண்களித்தற்குக்காரணமான ஆச்சரியம்; மயக்கம் - கண்டாரைமயங்கப்பண்ணுதல்.

சுச - ரு. காண்டலின், விசாரமில்லையென்று.

(சுங) வேடர்சொன்னவளவிலே (சுஎ) உற்றதையெல்லாம் (கக) ஒழிவின்று (சுசு) உரைக்குமெனக; உரைக்குமென்றது, முற்று.

சுக. தீவினைச்சிலம்பு - இவர் தீவினை பலித்தற்குக்காரணமான சிலம்பு.

(எ0) உற்றதும், (எஉ) வழக்கும், (எஎ) சுட்டதும் சொல்லியென ஒரு சொல் வருவிக்க.

அ0 - அக. இணர்க்கோதை - கண்ணகி. பொறாஅயமயங்கினனே.

அஉ. தலைத்தாணெடுமொழி - கண்ணகிசொல்லிய வீரமொழி; மரித்தபடியால், அவள்சொல்லியது முடியக்கேட்டிலன்.

1. "கண்களி கொள்ளுங் காட்சியை" சிலப். உசு: எக.

2. "அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்" சிலப். பதி. க0.

3. "சூழ்வினைச் சிலம்பு காரண மாக" சிலப். பதி. ருஅ.

4. "அரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன், திருவீழ் மார்பிற் றென்னவர் கோவே" சிலப். உ0;உஉ-க.

5. "தயங்கிணர்க் கோதை" மணி: எ. க00.

கலக்கங் கொள்ளாள் * கடுந்துயர் பெருஅண்
மன்னவன் [1] செல்வுழிச் செல்க யானெனத்
தன் னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற்
[2] பெருங்கோப் பெண்டு மொருங்குடன் † மாய்ந்தனள்
கொற்ற வேந்தன் கொடுங்கோற் றன்மை
யிற்றெனக் காட்டி யிறைக்குரைப பனள்போற்
றன்னாட் டாங்கட் டனிமையிற் செல்லா
ணின்னாட் டகவயி னடைந்தன ணங்கை ‡ யென்
றேழிவின் றுரைத்தீண் டூழி யூழி
[3] வழிவழிச சிறக்கநின் வலம்படு கொற்றமெனத்
தென்னர் கோமான் றீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தின னுரைப்போ
னெம்மோ ரன்ன § வேந்தற் குற்ற
செம்மையி || னிகந்தசொற் செவிப்புலம் படாமு
[4] னுயிர்பதிப ¶ பெயர்த்தமை யுறுக வீங்கென
[5] வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச செங்கோ லாக்கியது

---

௮௩. கலக்கங் கொள்ளாளெனருர், கடுகமரித்தாளென்றதுதோன்ற.

௮௮. இறை, முனனிலைப்பெயர்.

௯௫. எம்மோரன்னவென்றது, உட்கோள்.

௯௫-௭. பாண்டியனது உயிரை உடம்பினின்று நீக்கினமை இப்பொழுது கடுகச்சென்றுற வேண்டுமென.

௯௯. ஆக்கியது, முற்று

---

[1]. மெய்யீற்று முன் உயிர்வருங்கால் உடம்படுமெய்யன்றெனப்படும் வகரம் தோன்றுமென்பதற்கு, 'செல்வுழிச் செல்க' என்பது மேற்கோள்; நன்-வி. சூ. ௧௬௬.

[2]. ௭௮-௮௬. "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா தின்னுயி ரீவர்......பத்தினிப் பெண்டிர்" (மணி. உ: ௪௨-௮) என்பது இவ் வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலது.

[3]. "வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்" மதுரை. ௧௯௪.

[4]. உயிர்பதிப் பெயர்த்தல் - உயிரை உடம்பினின்றும் நீக்குதல்; "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்ததும்," (சிலப். உ௭:௮௧); "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" மணி. ௧௭:௧௫.

[5]. ௯௮ - ௯. "வளைகோ விழுக்கத் துயிராணி கொடுத்தாங், கிருநில மடந்தைக்குச் செங்கோல் காட்ட" சிலப். உஉ:௪-௫.

(பி - ம்.) * 'கடுந்துயருறுள்மன்னன்' † 'அமர்ந்ததும்' ‡ 'எனவொழி' § 'வேந்தர்க்கித்றெனச்' || 'இழந்தசொல்செவி' ¶ 'பெயர்த்தமை'

மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சங்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
[1] மன்பதை காக்கு நன்குடிப் பிறத்த
றுன்ப மல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பம் * துணிந்துவந் துரைத்த
[2] நன்னூற் புலவற்கு நன்கன முரைத்தாங்
குயிருடன் சென்ற வொருமக டன்னினுஞ்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினு
நன்னுதல் வியக்கு நலத்தோ ரியாரென
மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி
காதலன் றுன்பங் காணாது † கழிந்த
மாதரோ பெருந்திரு வுறுக ‡ வானகத்
தத்திற நிற்கநம் மகனா டடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல்வேண்டுமென
மாலை வெண்குடை மன்னவன் விரும்பி
நூலறி புலவரை நோக்க வாங்கவ
ரொற்கா மரபிற் பொதியி லன்றியும்
[3] விற்றலைக் கொண்ட வியன்பே § ரிமயத்துக்

கOக. பிழையுயிரெய்தின் - உயிர்கள் யாதானுமொன்றால் வருந்தின்.

கOரு. துன்னியதுன்பம் - கண்ணகிக்குத் துன்னியதுன்பத்தை.

கOச - ரு. தொழுதகவில்லென வந்துரைத்த.

கOகூ. நன்னுதல், முன்னிலைப்பெயர். ககக. காதலன் - பாண்டியன்.

ககஉ - ச. மாதர் - அவன்றேவி; அவள் வானிலே திருவுறுக; அதுகூற வேண்டா; இவளைக்கொண்டாடவேண்டுமென்று தேவிசொல்ல.

ககசு. [4] நூலறிபுலவர் - அமைச்சர்.

ககஎ - உக. இமயக்கல்லுக்குக்கங்கை; பொதியிற்கல்லுக்குக் காவிரி.

---

[1] "ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான், றருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன், மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்த, னருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோ தான்" பெரிய. திருவாரூர். சச.

[2]. நன்னூற்புலவன்—சாத்தனார்; மணிமேகலைநூலாசிரியர்.

[3]. "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர், கற்கொண்டு பெயருமெங் காவலன்!" (சிலப். உ௫:கஅக-௪); "கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டி" பதிற். ௫-ஆம் பத்துப் பதிகம்.

[4]. "நூலவர்பாகமாக" சூளா. மந்திர. எ.

(பி - ம்.) * 'துணைந்து' † 'கரந்த' ‡ 'வானத்' § 'இமயத்தாங்'

கற்கால் கொள்ளினுங் கடவு * ளாகுங்
கங்கைப்பேர் யாற்றினுங் காவிரிப் புனலினுந்
தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப்
பொதியிற் குன்றத்துக் † கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தன
‡ மறத்தகை நெடுவா ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉஞ் § செய்கையோ வன்று
புன்மயிர்ச் சடைமுடிப் [1] புலரா வுடுக்கை
முந்நூன் ‖ மார்பின் முத்தீச் செல்வத்
திருபிறப் பாளரொடு பெருமலை யரசன்
மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்
¶ கடவு ளெழுதவோர் கற்றா ராயெனின்
வழிநின்று பயவா மாண்பில் வாழ்க்கை
[2] கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியு
முதுகுடிப் பிறந்த முதிராச் செலவியை
மதிமுடிக் களித்த [3] மகட்பாற் காஞ்சியுந்
தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
[4] நின்றெதி ரூன்றிய நீள் [5] பெருங் காஞ்சியு

கஉஅ. இருபிறப்பாளர் - தேவவிருடிகள்.

கஉஅ - கூ0. பார்ப்பாருடனே மகட்டருதற்குத் இருபிறப்பாளரோடு கல் தாராயினென்றான். கூ0. [6] எழுத - பண்ண

கூக - உ. நிலைநின்று பயன்படாத வாழ்க்கையை மரீஇயோர் இருந்தோர்க்குக் காட்டிய நிலையாமையும்.

கூச. மதிமுடி - தேவன். மகட்பாற் காஞ்சி - தான் இனியானையக்கொடுத்த காஞ்சியும். [தான்.

கூரு - கூ. தென்றிசைக்கண்ணே மேற்செலவு. அவன் எதிரூன்றலையுயர்த்

[1]. "ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண், புலராக் காழகம் புலர வுடீஇ" முருகு. க௮௩-௪.

[2]. "கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்" (தொல. புறத்திணை. சூ. உ௪) என்பதையும் அதன் உரைகளையும் பார்க்க.

[3]. 'ஏந்திழையாட் டருகென்னும், வேந்தனொடு வேறுநின்றன்று' பு-வெ. ௪:உ௪.

[4]. "எதிரூன்றல் காஞ்சி" : "வெட்சிநிரை கவர்தல்"—

[5]. "தாங்குதிறன்மறவர் தத்த மாற்றல், வீங்கு பெரும்படையின் வெளிப்படுத்தன்று" பு-வெ. ௪:கூ.

[6]. "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்', "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (சிலப் உரு: கசுக; உசு: கச); "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, வந்தி லெழுதிய வற்புதப் பாவை" "கடவுளெழுதிய, வந்திற்பாவை"(மணி. எ: க௪-௫; கரு: கக-௪.)

(பி - ம்.) * 'ஆகுமெனக்கங்கை' † 'கற்கொண்டுபெயர்த்துமுது' ‡ 'மறத்தகுநெடு' § 'செய்தியோ' ‖ 'மார்பத்துமுத்தீ' ¶ 'கடவுளாகவோர்'

[1] திலவுக்கதி ரணிந்த நீள்பெருஞ் சென்னி
யலர்மந் தாரமோ டாங்கயன் மலர்ந்த
வேங்கையொடு தொடுத்த விளங்குவிறன் மாலை
மேம்பட மலைதலுங் * காண்குவ லீங்கெனக்
[2] குடைநிலை வஞ்சியுங் [3] கொற்ற வஞ்சியு
நெடு [4] மா ராய நிலைஇய வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன் [5] பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பிற் [6] பெருஞ்சோற்று † வஞ்சியுங்
குன்றாச் சிறப்பிற் [7] கொற்ற வள்ளையும்
[8] வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்

௧௩௭ - ௪0 சென்னியிலே மந்தாரமாலையோடு வேங்கைப்பூ இடையிட்டுத் தொடுத்த மாலையைத் தான் சூடிநிற்கு மதுவுங் காண்பேன்; [அவையும் வெட்டுவனென்பதாம்.]

௧௪௬. வட்கர் போகிய - இடையில் முரியில்லாத; நேராதார் போகைக்குக் காரணமாகிய போந்தையென்றுமாம்.

1. "திலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி" சிலப். ௨௬: ௫௪.

2. குடைநிலைவஞ்சி-குடைநாட்கோடல்; "பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று" பு-வெ. ௩:௧.

3. கொற்றவஞ்சி-அரசனது வெற்றியின் மிகுதி; "வையகம் வணங்க வாளோச் சினனெனச், செய்கழல் வேந்தன் சீர்மிகுத் தன்று" பு-வெ. ௩ : ௭.

4. மாராயவஞ்சி-அரசனாற் சிறப்பெய்துநிலை; "மாராயம் பெற்ற நெடுமொழி யானும்" (தொல். புறத்திணை. சூ. ௮ - இளம். ௩. "மறவேந்தனிற் சிறப்பெய்திய, விறல்வேலோர் நிலையுரைத்தன்று" பு-வெ. ௩:௧௧.

5. பெருவஞ்சி - பகைவர்நாட்டைக்கொளுத்தல்; "முன்னடையார் வளநாட்டைப், பின்னருமுடன் றெரிகொளீஇயன்று" பு-வெ. ௩ : ௨௨.

6. பெருஞ்சோற்றுவஞ்சி - வீரர்களுக்குப் பெருஞ்சோறளித்தல்; "பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும்" (தொல். புறத்திணை. சூ. ௮ - இளம். ௩); "திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப், பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று" பு-வெ. ௩: ௨௧.

7. கொற்றவள்ளை - அரசன் பிரதாபத்தைக் கூறுவதுடன் பகைவர்நாடு அழிந்ததற்கு இரங்கல்; "குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்" (தொல். புறத்திணை. சூ. ௮—இளம். ௩); "மன்னவன் புகழ்கிளந், தொன்னார்நா டழிபிரங்கின்று" பு-வெ. ௩ : ௨௫.

8. (௧) "வட்கர் போகிய வளரிளம் போந்தை" (புறநா. ௧00.) (௨) ௧௪௬-௭. அரசர் தமக்குரிய அடையாளப் பூக்கள் முதலியவற்றுடன் புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுப்பித்துத் தாம்சூட்டிக்கொள்ளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும் மரபு; இதனை, "பொலந்தோட்டுப் பைந்தும்பை, மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ", "வேம்பி னொண்டளிர், நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து", "போந்தை, யுச்சிக் கொண்ட வூசிவெண் டோட்டு, வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச், சுரிபிரும் பித்தை பொலியச் சூடி" (புறநா. ௨௨, ௭௭, ௧00); "இளவரிக்கவட்டிலை யாரோடேர்பெறத், துளவியறும்பையுஞ் சுழியச்சூடினன்" (கம்ப. முதற்போர். ௧௧௫) என்பவற்றுமு முணர்க.

(பி - ம்.) * 'காண்குவ மீங்கெனக்கொடை' † 'வஞ்சியும்வட்கார்வான்பனைத் தோட்டுடன்பூட்கை'

புட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
[1] பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாண் மலைந்த வஞ்சிசூ டுதுமெனப்
பல்யாண்டு வாழ்கநின் கொற்ற மீங்கென
வில்லவன் கோதை வேந்தற் குரைக்கு
நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்
கொங்கர்செங் களத்துக் கொடுவரிக் கயற்கொடி
* பகைபுறத்துத் தந்தன ராயினு மாங்கவை
திசைமுக வேழத்தின் செவியகம் † புக்கன
கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
‡ பங்களர் [2] கங்கர் பல்வேற் கட்டியர்
வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்
கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது
கங்கைப் பேர்யாற்றுக் கடும்புன னீத்த
மெங்கோ மகளை யாட்டிய § வந்நா
ளாரிய மன்ன ரீரைஞ் ஞூற்றுவர்க்
கொருநீ யாகிய செருவெங் கோலங்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்

௧௪௭. பூட்கை - மேற்கோள்; புட்கை, விகாரம்.

(௧௪௧) 'குடைநிலைவஞ்சி' முதலாக, (௧௪௪) 'பெருஞ்சோற்றுவஞ்சி' ஈறாகத் தன்சேனைக்குச் (௧௪௭) சூட்டி.

௧௪௮. பூவாவஞ்சி - கருவூர்.

௧௫௦ - ௫௧. 'பல்யாண்டு வாழ்க' என்று இனிச் சொல்லுகின்றான், வில்லவன்கோதையென்னுமந்திரி

௧௫௨. நும்மையொக்கும்வேந்தரென்றான், குலம்பற்றி.

௧௫௩ - ௫. புலிக்கொடியும் கயற்கொடியும் பகைக்களத்திலே உனக்குத் தந்து ஓடினாராயினும் அவை எங்கும் பரந்து திக்கயங்களின் செவியகம் புக்கன.

௧௫௮. தமிழ்ப்படைமயங்கிய செருக்களம்.

௧௫௯. கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது - நீ நின்யானையை விட்டபடி என் கண்ணினின்றும் போகாது.

௧௬௧ எங்கோமகளென்றது, செங்குட்டுவன்மாதாவை; அவளை இவன் கொண்டுபோய்த் தீர்த்தமாட்டினதொருகதை.

௧௬௨ - ௪. ஆரியவரசராயிரவர்க்கு நீயொருவனாகச்செய்த போர்க்கோலம் கண்டது கூற்றமன்றே.

---

1. "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி" (சிலப். ௨௯: ௫௦); "பூவா வஞ்சியுந் தருகுவன்" (புறநா. ௩௨); "பூத்த வஞ்சி பூவா வஞ்சியில்" மணி. ௨௮:௭௮.

2. கங்கர் கட்டியர் - தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு சிற்றரசர் மரபினர்; "நன்னனேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" அகநா. ௪௪.

(பி - ம்.) * 'பகைப்புறத்து' † 'புக்கெனகொங்கர்' ‡ 'வங்களர்கங்கர்வல்வேற்' § 'தன்னாள்'

[1] இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
[2] விதுநீ கருதினை * யாயி னேற்பவர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
யிமய மால்வரைக் கெங்கோன் செல்வது
[3] கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்
வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாந்
தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் † கயற்புலி
மண்டலை யேற்ற வரைக வீங்கென
நாவலந் தண்பொழி னண்ணா ரொற்றுநங்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா
வம்பணி யானை வேந்த ரொற்றே
தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றே
வறைபறை யென்றே [4] யழும்பில்வே ளுரைப்ப
[5] நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து
கூடார் வஞ்சிக் கூட்டுண்டு சிறந்த
வாடா வஞ்சி மாநகர் புக்கபின்

கசுஅ. செல்வது - செல்லுகிறபடியை.

கசுரு - எஉ. இமிழ்கடல்வேலியைத் தமிழ்நாடாக்கவேண்டி இமயத்தே கற்கால்கொளக்கருதின், ஏற்பார் யாரென்று அரசனுக்குச்சொல்லி ஓலையெழுதுகவென்றான்.

கஎக - உ. வில்லுக் கயல் புலி இவையிற்றினையுடைய இலச்சினைமண்ணேற்ற ஓலைகளை மன்னர்க்கெல்லாம் வரைகவென.

மேல் அழும்பில்வேள் கூற்று:—

கஎரு - எ. நண்ணார் வரவிட்ட ஒற்றுப் பிரியா; ஆகையாலே அவ்வொற்றே அரசர்செவிக்கு அறிவிக்குந்தன்மையையுடைய; வடதிசைக்குச்செலவு ஆனைமேல் இங்கே பறையறைய அடுக்குமென்றான். [பட்டு.

கஎஅ. பகைமேற்செல்பொழுது நிறுத்துதலரியதானை. நேர்ந்து - உடன்

கஎகூ - அ0. வஞ்சிக்கூட்டு - எடுத்துச்செலவாற்கொண்டதிறை; அதனாற் பொலிவுபெற்ற கருவூரிலே திரியச்சென்று புக்கபின்.

அரசன் பேராற்றங்கரையினின்றும் போந்துபுக்கபினென்க.

[1]. சிலப். ரு: கஎ; பதிற். உ; பதி; மணி. கஎ: கூஉ.

[2]. கசுகூ-எ. "இதுநீ கண்ணிய தாயி னிருநிலத், தியார்கொ லளியா தாமே" புறநா. இஉ. [3]. மு : சிலப். உகூ:கஙக.

[4]. "அழும்பில் வேளோ டாயக் கணக்கரை" (சிலப். உஅ: உ0ஙு; "பெரும்பூட் சென்னி, யழும்பி லன்ன வறுஅ யாணர்" (அகநா. சச); "மானவிறல்வே, ளழும்பில்" மதுரை. ஙசச-ரு.

[5]. 'நிறையருந்தானையொடு" மணி. கூ. உகூ.

(பி - ப்.) * 'ஆகவினெதிர்ப்பவர்' † 'கயல்புலிமண்டலையொற்றுவரு'

[1] வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதொ றூழி யுலகங் * காக்கென
[2] விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு † பெயருமெங் காவல னாதலின்
வடதிசை மருங்கின் மன்ன ரெல்லா
மிடுதிறை கொடுவந் தெதிரீ ராயிற்
[3] கடற்கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையுங்
கேட்டு வாழுமின் கேளீ ராயிற்
றோட்டுணை துறக்குந் துறவொடு வாழுமின்
றாழ்கழன் மன்னன் றன்றிரு ‡ மேனி
வாழ்க சேனா முகமென வாழ்த்தி
யிறையிக லியானை யெருத்தத் தேற்றி
யறைபறை யெழுந்தா லணிநகர் மருங்கென்.

௧௮௧. 'வாழ்க' என்றது முதல் பறையறைகின்றார் வார்த்தை.

௧௮௪. எங்காவலன் பெயருமென்பதை முற்றாக்கி ஆதலினென்க.

௧௮௬ - ௯. எதிரேற்றுக் காணீராயின், கடலுட்புக்கும் மலையிலேறியும் உறைமினென்பார், இரண்டுவார்த்தையும் கேட்டுவாழுமினென்றார்

[அவ்விடத்துப்படை அதன்புகழேயாதலான், அவ்விடங்களிற்செல்லாதுண்டே உறைமினென்பார், அரசன் போர்கருதினதிசையிற போம்படியைக் கேளீராயினென்றார்.]

௧௯௦. தோட்டுணை - மகளிர். துறவு - தவம்.

௧௯௧ - ௨ திருமேனியாகிய சேனாமுகம், சேனாமுகம அரசனுக்குச் சிறந்தமையின், 'திருமேனி' என்றார்.

௧௯௩. இறையிகலியானை - பட்டவர்த்தனம். ௧௯௪. பறை - பறையொலி. காட்சி - கற்கொள்ள மனத்தால் நிச்சயித்தல்.

௨௫—காட்சிக்காதை முற்றிற்று.

---

[1]. ௧௮௧-௨. "வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை, யூழிதொ றூழிதொ றுலகங் காக்க", "வாழ்கவெங்கோ மன்னவர் பெருந்தகை, யூழிதொ றூழி யுலகங் காக்கென", "ஊழிதொ றூழி யுலகங் காத்து, வாழ்க வெங்கோ வாழிய பெரிதென", "ஊழியோ ரேழி யுலகங் காத்து, நீடுவா ழியரோ" சிலப். ௧௧: ௧௫-௬; ௨௫: ௧௮௧-௨; ௨௭: ௧௩௬-௪௦; ௨௮: ௧௮௫-௬.

[2]. "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்துக், கற்கால் கொள்ளினுங் கடவுளாகும்" சிலப். ௨௫: ௧௧௮ ௯:

[3], சிலப்பதிகாரம், ௨௩: ௮௧ - ௨; ௨௮: ௧௩௫ - ௬.

(பி - ம்.) * 'காக்கவில்' † 'பெயருங்காவலன்' ‡ 'மேனியாயசேனா'

# இருபத்தாறாவது
# கால்கோட்காதை.

அறைபறை யெழுந்தபி னரிமா னேந்திய
முறைமுதற் கட்டி லிறைமக னேற
வாசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ
மன்னர் மன்னன் வாழ்கென் றேத்தி
முன்னிய * திசையின் முறைமொழி கேட்ப
† வியம்படு தானை விறலோர்க் கெல்லா
முயர்ந்தோங்கு வெண்குடை யுரவோன் கூறு
[1] மிமையத் தாபத ரெமக்கீங் ‡ குணர்த்திய
வமையா வாழ்க்கை யரைசர் வாய்மொழி
நம்பா § லொழிகுவ தாயி னாங்கஃ
தெம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர்தம் முடித்தலைக்
கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்
‖ செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
[2] பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்

௩ - ௫. தானைத்தலைவர் தம்மொடு ஆசான் பெருங்கணி அருந்திறலமைச்சர்கூடி ஏத்திக் கேட்ப.

(எ) ஏவப்பட்ட தானைத்தலைவர்க்கெல்லாம் (அ) கூறுமென்க.

௯. தாபதர் - தீர்த்தமாட இமயத்தினின்றும் வந்த தாபதர்.

க0. அமையாவாழ்க்கை - நிரம்பாத உயிர்வாழ்க்கை ; பலமில்லாத வாழ்க்கையெனலுமாம். அங்குள்ள ஆரியமன்னர் சொன்ன வார்த்தை.

கக - உ. நம்பால் ஒழிகுவதாயின் - அது நம்மிடத்தே கிடப்பதொரு வார்த்தையாயின் ; [அவர்க்குப் பலியாது] நம்மிடத்தே கிடந்துவிடிற் சோழ பாண்டியரிடத்தில் இகழ்ச்சியுந்தரும்.

[1]. ௯-கரு. "தென்றமிழ்நாடாளும் வேந்தர்.........தங்கைதன்னை தீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மைநீங்கி" சிலப். உ௬: உரைப்பாட்டுமடை.

[2]. கஎ-அ. "பழியொடு படராப் பஞ்சவ வாழி", "படர்த்தெழு குருதி படங்கா' சிலப். உ0: ௩௩; உ௬: கஉஎ.

(பி - ம்.) * 'திசைமென்முறைமொழி' † 'வியன்படு' ‡ 'உரைத்தவமையா § 'ஒழிவதாயின்' ‖ 'செருகழல் புனைந்தசெரு'

* குடிநடுக் குறாஉங் கோலே ளூகென
வார்புனை தெரியலு மலர்தார் வேம்புஞ்
சீர்கெழு மணிமுடிக் கணிந்தோ ரல்லா
லஞ்சினர்க் கணிக்கு மடுபோ ரண்ணனின்
வஞ்சினத் தெதிரு மன்னரு முளரோ
விமைய வரம்பநின் னிகழ்ந்தோ ரல்ல
ரமைகநின் சினமென வாசான் கூற
[1] வாறிரு மதியினுங் காருக வடிப்பயின்
† றைந்து கேள்வியு மமைந்தோ னெழுந்து
வெந்திறல் வேந்தே வாழ்கநின் கொற்ற
மிருநில மருங்கின் மன்ன ‡ ரெல் லாநின்
திருமலர்த் தாமரைச சேவடி பணியு
முழுத்த மீங்கிது முன்னிய திசைமே
லெழுச்சிப பாலை § யாகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
[2] வாளுங் குடையும் வடதிசைப் பெயர்கென
வுரவுமண் சுமந்த வரவுத்தலை பணிப்பப்

௧௮. ஆகவென று சொல்ல.

௧௯ - ௨௪. இமயவரமப ! சோழபாண்டியரையல்லது நின்னை இகழ்ந்து கூறினாரல்லர்; அடுபோரண்ணலே! நீ வஞ்சினங்கூறுதற்கு நின்னுடன் எதிர்க்கும் மன்னருமுளரோ; ஆதலால், நின்சினந்தணிகவென்றான்; இது புரோகிதன் வார்த்தை.

௨௫. ஆறிருமதியினும் - இராசி பன்னிரண்டிலும். காருகவடி - கிரகநிலை.

௨௬. ஐந்து கேள்வி - திதி வாரம் நக்ஷத்திரம் யோகம் கரணம்; நட்பு ஆட்சி உச்சம் பகை நீசக்கோளுமாம். அமைந்தவன் - [4] மௌத்திகன்.

௩0 - ௩௧. இது [5] முழுத்தம் ; எழும் பககத்தையாக வெனச் சொல்ல.

௩௪. உரவுமண் - உரத்தமண்.

[1]. 'சிலப்பதிகாரம், ௧௧: ௨௮-ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

[2]. 'வாளுங் குடையு மயிர்க்கண் முரசு, நாளொடு பெயர்த்து', 'மறமிகு வாளு மாலை வெண் குடையும், புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்தி" (சிலப். ௫: ௯௧ - ௨ ; ௨௬: ௪௪-௫.) "குடைநாட்கொளல் வாணாட்கொளல் குறியாவர சவுண, னுடைநாளழி வறியாதவ னுரனென்றிய வாழிப்,படைநாரணன் மகன்வெண்குடை பற்றக்குடை யேயா, படையாவமர் வுற்றலன முடிமீக்குடை நிழல" தணிகை. சீபரி. ௩௬.

[3], ௨௫-௩௧ = முல்லைப்பாட்டு, ௫௫-௮

[4]. மௌகூர்த்திகன். [5] முகூர்த்தம்; இது முகிழ்த்தமெனவும் வழங்கும்.

(பி - ம்.) * 'குடிநடுக்குறக்குங்' † 'ஆறைந்து' ‡ 'எல்லாந்திரு' § 'ஏகென்று'

பொருந ரார்ப்பொடு முரசெழுந் * தொலிப்ப
விரவிடங் கெடுத்த † நிரைமணி விளக்கின்
விரவுக்கொடி யடுக்கத்து நிரயத் தானையோ
[1] டைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
‡ வெம்பரி யானை வேந்தற் கோங்கிய
கரும வினைஞருங் கணக்கியல் வினைஞருந்
தரும வினைஞருந் தந்திர வினைஞரு
[2] மண்டிணி ஞால மாள்வோன் வாழ்கெனப்
பிண்ட முண்ணும் பெருங்களிற் றெருத்தின்
மறமிகு வாளு மாலைவெண் குடையும்
புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்
புரைதீர் [3] வஞ்சி போந்தையிற் றொடுப்போ
[4] னரைசுவிளங் கவைய § முறையிற் புகுதர
வரும்படைத் தானை யமர்வேட்டுக் கலித்த
பெரும்படைத் தலைவர்க்குப் [5] பெருஞ்சோறு வகுத்துப்
[6] பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து

௩௬. இரவிடங்கெடுத்த விளக்கிலேயென்றதி........ ........விடுகிறபடி யாலே ................. .....

௩௭. [7] நிரயத்தானை - மாற்றார்க்கு நரக வேதனையைச் செய்யுந்தானை.

௪௦. கருமவினைஞர் - புரோகிதர்.

௪௨. பிண்டமுண்ணும் பெருங்களிறு - ... ..........பிண்டத்துக்குரிய களிறு; பட்டவர்த்தனம்.

௪௫. புகுத்தி - புகவிட்டு. ௪௬. தொடுப்போன் - சேரன்.

---

1. சிலப். ௫: ௧௫௭; மணி. ௧: ௧௭; பெருங். ௨: ௫. ௬; ௪௪. ௧௧. ௧; தொல். கிளவி. ௬. ௫௭-ந. மேற்.

2. "மண்டிணிந்த நிலம்" புறநா. ௨

3. அரசர், தமக்குரிய அடையாளப்பூ முதலியவற்றோடு புறத்திணைக்குரிய பூ முதலியவற்றையும் விரவுவித்து அணிந்துகொள்ளுதல் மரபு: ௨௫-ஆம் காதையிலுள்ள, ௧௪௫-௬-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

4. "அரசுவிளங் கவையத்து" சிலப். ௨௬: ௬௫.

5. சிலப். ௨௫: ௧௪௪ - ஆம் அடிக்குறிப்லைபப்பார்க்க; "பெருஞ்சோறுகுத்தற் கெறியுங், கடுஞ்சின வேந்தே' பதிற் ௩௦.

6. சிலப். ௨௫: ௧௪௮-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

7. நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்" (குறுந். ௨௫௮);' "நிரைகளி றொழு கிய நிரையவெள்ளம்" பதிற். ௬௫.

(பி - ம்.) * 'ஆர்ப்ப' † 'மாமணி' ‡ வெம்பரித்தானை வேந்தர்க்கு' §'முறைமையிற்'

ஞாலங் காவலர் நாட்டிறை பயிருங்
[1] காலை முரசங் கடைமுகத் தெழுதலு
[2] நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
யுலகுபொதி யுருவத் [3] தயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடு * புனைந்
திறைஞ்சாச சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
† மறையோ ரேந்திய வாவுதி நறும்புகை
நறைகெழு மாலையி னல்லகம வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொளகென
[4] வாடக மாடத் தறிதுயி ‡ லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலரநின் § றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள
வண்ணச சேவடி மணிமுடி வைத்தலி
னாங்கது வாங்கி யணிமணிப புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
[5] நாடக மடந்தைய ராடரங் கியாங்கணுங்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே

௫௨-௩. அரசரிடுந்திறையை அழைக்கும் முரசம.

௫௮. ஏந்திய - எடுத்த. புகை - அக்கினிகோத்திரம

௫௭-௮. அக்கினிகோத்திரங்களையும் நமக்கரித்து.

௬௨. ஆடகமாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரமென்பாருமுளர்.

(௬௦) ஏறினன் (௬௭) தாங்கின னாகிச் செல்வுழி.

௬௯. கூடையிற் பொலிந்து-குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை-இரட்டை ஒற்றைக்கை.

---

[1]. சிலப்பதிகாரம், ௧௭: ௫-௬ ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[2]. "நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி" சிலப். ௨௫: ௧௭.

[3]. ௫௫-௭. "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வா நகர் வலஞ் செயற்கே" புறநா. ௬.

[4]. "ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்" (சிலப். ௩௦: ௫௧); 'ஆடகமாடம்' இறை. சூ. ௨௧-மேற்.

[5]. "கழங்காடு மகளி ரோதை யாயத்து, வழங்குதொடி முன்கை மலர வேந்தி, வானவன் வந்தான் வளரிள வனமுலை, தோணலமுணீஇய தும்பை போந்தையொடு, வஞ்சி பாடுது மடவீர் யாமெனு, மஞ்சொற் கிளவிய ரந்தீம் பாணியும்" சிலப். ௨௭: ௨௪௫-௫௦.

(பி - ம்.) * 'பொருந்தியிறைஞ்சாச்' † 'மறையோராகிய வாகுதி நறும்புகை நறைகெழுமாலைநல்லகம்' ‡ 'அமைந்தோன்' § 'ஏத்தநாடக மடந்தையா'

[1] வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோ
டோடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை * கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
[2] மாகதப் புலவரும் † வைதா ளிகருஞ்
சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த
[3] யானை வீரரு மிவுளித் தலைவரும்
வாய்வாண் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்
வானவன் போல வஞ்சி நீங்கித்
‡ தண்டலைத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
[4] வெண்டலைப் § புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட
வுலக மன்னவ னொருங்குடன் சென்றாங்
காலும் புரவி யணித்தேர்த் தானையொடு
நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்
காடியல் யானையுந் தேரு மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்
பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்ற
னிருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்

எ௦-எக. அரசர்சூடுவன யானைகட்குஞ் சூட்டுதலின், வாகையும் தும்பையும் போந்தையோடு நீலயானைமுகத்து ஓங்கித் தோன்றவென்றார்.

(சுஅ) நாடகமடந்தையா (எக) காட்சியை யுடையை யாகவென வாழ்த்தாநிற்க.

எ௫. நல்வலம் - களவெற்றி. எஅ. தானவர் - அசுரர்.

அ௦. தார் - தூசிப்படை. அக. கடற்கரை அருகே போத.

அ௫. நீலகிரி - ஒருமலை. அஅ. நடுவுநிலை விரும்புவோன.

அஅ-கூ. சேரன் தானுள்ளஇடம் பூமிதேவிக்குத் திருவடியளித்தது; அங்கே யானையினின்றிழிந்து காலிலந் தோயச்செய்தலால்...... ... ......... .......

1. "போந்தையொடு தொடுத்த பருவத்தும்பை", 'தோடார் போந்தை தும்பையொடு முடித்து' சிலப். உசு: உகக; உஎ: சுரு.

2. "சூதர் மாகதர் வேதா ளிகரொடு" (சிலப். ரு: சுஅ); சூத ரேத்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு" மதுரை சுஎ௦-எக.

3. எஎ. "வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த" சிறுபாண். உகஉ.

4. "வெண்டலைப் புணரி", "வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப" புறநா. உ, கக.

(பி - ம்.) * 'கவருங்கண்' † 'வேதாளியரும்' ‡ 'தண்டத்தலைவருந்தலைச்சார்ச்சேனை' § 'புணரிவிளிம்புசூழ்போக'

கருந்திறன் மாக்க ளடியீ டேத்தப்
பெரும்பே ரமளி யேறிய பின்ன
ரியங்குபடை யரவத் தீண்டொலி யிசைப்ப
விசும்பியங்கு முனிவர் வியனில மாளு
மிந்திர திருவனைக் * காண்குது மென்றே
யந்தரத் திழிந்தாங் கரசுவிளங் கவையத்து
மின்னொளி மயக்கு மேனியொடு தோன்ற
மன்னவ னெழுந்து வணங்கிநின் றோனைச்
[1] செஞ்சடை வானவ னருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய † வானவ கேளாய்
மலயத் தேகுதும் வான்பே ரிமய
நிலயத் தேகுத னின்கருத் தாகலி
னருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர்
‡ பெருநில மன்ன காத்தனின் கடனென்
றாங்கவர் வாழ்த்திப் போந்ததற் பின்னர்
[2] வீங்குநீர் ஞால மாள்வோன் வாழ்கெனக்
[3] கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடருந்
§ தங்குலக் கோதிய தகைசா லணியின
[4] ரிருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி
மருள்படப் பரப்பிய வொலியன் மாலையர்
வடஞ்சுமந் தோங்கிய வளரிள வனமுலைக்
கருங்கய னெடுங்கட் காரிகை யாரோ
டிருங்குயி லால வினவண் டியாழ்செய

௯௨. இயங்குபடை - சேனை; வெளிப்படை. இசைப்ப - இசைத்தலால்.

௧0௧. நிலயத்து - நிற்கிறவிடத்து.

௧0௨ - ௪. அங்கு அந்தணர்வாழ்வாருளர்; அவர்களை நலியாதுகாத்தல் நினது கடனென்று பெயர்ந்தபின்.

௧0௬. கொங்கணதேசத்துக்கூத்தர்.

௧0எ. குலத்திற்கு ஓதிய ஒப்பனையினராய. ௧0அ. குஞ்சியிடத்து.

௧0௯. ஒலியன்மாலை - தழைத்தமாலை.

---

[1]. ௯அ-௯. "ஆனே றூர்ந்தோ னருளிற் றோன்றி, மாநிலம் விளக்கிய மன்னவன்" சிலப். ௩0: ௧௪௧-௨. [2]. மு. சிலப்பதிகாரம், உ௯: ௧௫௫, ௧எ௧.

[3] பிரயோக. ௨: உரை, மேற். [4]. முருகு. ௯0.

(பி - ம்.) * காண்குவம், † 'வானவன்' ‡ 'பெருநில' § 'தன்குலக்கொழுதிய'

வரும்பவிழ் வேனில் வந்தது வாரார்
காதல ரென்னு மேதகு சிறப்பின்
மாதர்ப் பாணி வரியொடு தோன்றக்
கோல்வளை மாதே கோலங் கொள்ளாய்
காலங் காணாய் கடிதிடித் துரறிக்
காரோ வந்தது காதல ரேறிய
தேரோ வந்தது செய்வினை முடித்தெனக்
காஅர்க் குரவையொடு கருங்கய னெடுங்கட்
கோற்றொடி மாதரொடு குடகர் தோன்றத்
தாழ்தரு கோலத்துத் * தமரொடு சிறந்து
வாள்வினை முடித்து மறவாள் வேந்த
னூழி வாழியென் றோவர் தோன்றக்
கூத்துள் † படுவோன் காட்டிய முறைமையி
னேத்தின ரறியா விருங்கல ‡ னல்கி
[1] வேத்தின நடுக்கும் வேலோ னிருந்துழி
நாடக மகளிரீ ரைம்பத் திருவருங்
§ கூடிசைக் குயிலுவ ரிருநூற் றெண்மருந்
[2] தொண்ணூற் றறுவகைப் பாசண் டத்துறை
நண்ணிய நூற்றுவர் [3] நகைவே ழம்பருங்
கொடுஞ்சி நெடுந்தே ரைம்பதிற் றிரட்டியுங்
கடுங்களி யானை யோரைஞ் ஞூறு
மையீ ராயிரங் கொய்யுளைப் புரவியு
மெய்யா வடவளத் திருபதி னாயிரங்
[4] || கண்ணெழுத்துப் படுத்தன கைபுனை சகடமுஞ்

௧௧௫. பாணிவரி - இப்பொருள்வைத்த உரு.

(௧௨0) கார்காலத்தைப் பாடின பாட்டோடு (௧௨௧) இவர்கள் தோன்ற; இவர் குடகர்.

௧௨௪. ஓவர் - ஏத்தாளர். ௧௨௫. கூத்துள்படுவோன் - ஆடலாசிரியன்.

௧௩௫. எய்யாவளம் - புறம்பு ஓரிடத்தும் கண்டறியாவளம்; அதுதான் வடக்கிற் பாகுடம்.

௧௩௬. இன்னசரக்கென்று எழுத்துப்படுத்தன; சகடம்-கொல்லாபபண்டி.

1. சிலப். ௨௬: ௧௭ - ௮.

2. இந்நூல் ௬-ஆம் காதை ௧௪ - ௫-ஆம் அடிகளின் உரையையும், அவற்றின் கீழ்க்குறிப்பையும்பார்க்க; ப. ௨௪௮. 3. சிலப்பதிகாரம், ௫: ௫௯.

4. கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதி" சிலப். ௫: ௧௧௨.

(பி - ம்.) * 'தமரொடுஞ்சிறந்து வாழ்வினை' † 'படுவோள்' ‡ 'நல்கவேத்தினர் நடுக்கும்' § 'கூடைக்குயிலுவர்' || 'கண்ணெழுவுடையன கைபுனைசகடமும்'

சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற
கஞ்சுக *முதல்வ ரீரைஞ்ஞூற் றுவருஞ்
சேயுயர் விற்கொடிச் செங்கோல் வேந்தே
வாயி லோரென வாயில்வந் திசைப்ப
நாடக மகளிரு நலத்தகு மாக்களுங்
† கூடிசைக் குயிலுவக் கருவி யாளருஞ்
சஞ்சயன் றன்னொடு வருக வீங்கெனச்
செங்கோல் வேந்தன் றிருவிளங் கவையத்துச்
சஞ்சயன் புகுந்து தாழ்ந்துபல வேத்தி
யாணையிற் ‡ புகுந்தவீ ரைம்பத் திருவரொடு
மாண்வினை யாளரை வகைபெறக் காட்டி
வேற்றுமை யின்றி நின்னொடு கலந்த
நூற்றுவர் கன்னருங் § கோற்றொழில் வேந்தே
[1] வடதிசை || மருங்கின் வானவன் பெயர்வது
கடவு ளெழுதவோர் கற்கே ¶ யாயி
னோங்கிய விமயத்துக் கற்கால் கொண்டு
வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்தாங்
கியாந்தரு மாற்றல மென்றன ரென்று
[2] வீங்குநீர் ஞால மாள்வோய் வாழ்கென
வடல்வேன் மன்ன ராருயி ருண்ணுங்
கடலந் தானைக் காவல னுரைக்கும்
பால குமரன் மக்கண் மற்றவர்
[3] காவா நாவிற் கனகனும் விசயனும்

௧௩௭. சஞ்சயன் - தூதரிற்றலையாயவன். தலைக்கீடு - மயிர்க்கட்டு.

௧௩௮. கஞ்சுகமுதல்வர் - சட்டையிட்டபிரதானர்.

௧௪௬. ஆணையிற் புகுந்த ஈரைம்பத்திருவரென்றது, முன்சொன்ன நாடக மகளிரை; கன்னரென்பார் வரக்காட்டினர்.

௧௫௮-௯. பாலகுமரன் மக்கள் - கனகனும் விசயனுமென்பார்.

1. ௧௫0 - ௯. "இமய மால்வரைக் கெங்கோன் செல்வது, கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்" சிலப். உ௫: ௧௬௮-௯. 2 "வீங்குநீர் ஞால மாள்வோன்" ௧௭௯.

3. "யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" (குறள், ௧௨௭); "ஆக்கப் படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்குங், காக்கப் படுவன விந்திய மைந்தினு, நாக்கல தில்லை நனி வெல்லு மாறே" வளையாபதி.

(பி - ம்.) * 'முதல்வ ரைஞ்ஞூற் றுவரும்' † 'கூடிய குயிலுவக்' ‡ 'புகுந்த வைம்பதி……னரமாண்வினை' § 'கோத்தொழில்' || 'மருங்குவான்பேரிமை யத்துக்' ¶ 'ஆகிலோங்கியர்'

விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
யருந்தமி ழாற்ற லறிந்தில ராங்கெனக்
* கூற்றக் கொண்டிச் சேனை செல்வது
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன
வங்கப் பெருநிரை செய்க தாமெனச்
சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்க
ளெஞ்சா நாவின ரீரைஞ் ஞூற்றுவர்
[1] சந்தின் குப்பையுந் தாழ்நீர் முத்துந்
தென்ன ரிட்ட திறையொடு கொணர்ந்து
† கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
[2] மண்ணுடை ‡ முடங்கல மன்னவர்க் களித்தாங்
காங்கவ ரேகிய பின்னர் மன்னிய

கசுO. விருந்தின் மன்னர் - தமிழ்வேந்தர் ஆற்றலறியாத புதிய அரசர்.

கசுO - கக. இவருடன்கூடித் தமிழ்வேந்தரை இகழ்ந்து உரைத்தார்.

கசுஉ. கூற்றம்போலும் கொடிச்சேனை 'கூற்றங் கொண்டிச் சேனை செல்வது' என்று பாடமாயின், கூற்றம் பின்செல்ல இப்படை செல்லுகிறபடியையென்க.

கசுக-உ. அருந்தமிழ் ஆற்றல அறிந்திலரென்று சேனை செல்வதெனச் சேனைமேலிட்டுக் கூறினான்; தனக்கு அவர் நிகரன்மையின்.

கசுசு. கஞ்சுகமாக்கள் - தன்றூதர்

கசுஎ. எஞ்சா நாவினர் - வார்த்தை தப்பாத நாவினர்; அரசன் நினைவு தப்பாத நாவினரென்றுமாம்.

கசுஅ. தாழ்நீர் - தங்குநீர்மை.

கசுஅ-கூ. சந்தும் முத்துமாகிய தென்னரிட்ட திறை

கசுகூ. கொணர்ந்து - கொணர.

கஎO. கண்ணெழுத்தாளர் - திருமுகமெழுதுவார்.

கஎO - எஉ. இவர்வரைந்து இலச்சினையிட்டு அவர் கைக்கொடுப்பத் திருமுகங்கொண்டு அவர்போயபின்.

கஎக. அளித்து - அளிப்ப.

---

1. சந்தனமும் முத்தும் தென்னர்க்கு உரியனவென்பதை, "கோவாமலையாரம் ......தென்னர்கோன் மார்பினவே" (சிலப். கஎ: உள்வரிவாழ்த்து,க) என்பதனாலும் அதன் கீழ்க்குறிப்பாலும் அறிக; ப. சசஎ.

2. "மண்ணுடை முடங்கன் மாதவி யீத்தது" சிலப். கக: எக.

(பி - ம்.) * 'கூற்றங்கொண்டி' † 'கண்ணெழுத்தாளரொடுகாவல்' ‡ 'முடங்கன்மன்னவர்க்கு'

வீங்குநீர் ஞால மாள்வோ னோங்கிய
நாடாள் செல்வர் நல்வல னேத்தப்
பாடி யிருக்கை நீங்கிப் பெயர்ந்து
கங்கைப்பே ரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங் * கெய்தி
யாங்கவ ரெதிர்கொள வந்நாடு கழிந்தாங்
கோங்குநீர் வேலி யுத்தர மரீஇப்
பகைப்புலம் புக்குப் பாசறை † யிருந்த
தகைப்பருந் தானை மறவோன் றன்மு
னுத்தரன் விசித்திர னுருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் ‡ றனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாந்
தென்றமி ழாற்றல் § காண்குதும் யாமெனக்
கலந்த கேண்மையிற் கனக விசயர்
[1] நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர
விரைதேர் வேட்டத் தெழுந்த வரிமாக்
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேன் மன்னர்
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
|| வெயிற்கதிர் விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்
வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயி

கஎக. உத்தரம் - வடபூமி.

கஅஉ-ச. உத்தரன் விசித்திரன்முதலான மன்னவர்கள், கனகவிசயர்க்குத் துணையான அரசர்.

கஅரு - எ. தமிழாற்றலைக் காண்டுமெனக் கனகவிசயர் தானையுடனே ஒத்துவர.

ககo. பாய்ந்த பண்புபோல.

ககக. காஞ்சித்தானை எதிரூன்றியதானை.

[1]. "நிலத்திரைக்குங் கடற்றானை" புறநா. கஎ.

(பி - ம்.) * 'ஏறியாங்கவரெதிர்கொளவவரநாடுகழிந்தேர்ங்குநீர்' † 'இராஅத் தகைப்பெருந்தானை' ‡ 'தநுத்திரன்' § காண்குவதாமென' || 'வெயிற்கொடி'

ரிடிக்குரன் முரச மிழுமென் பாண்டி
[1] லுயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசமொடு மாதிர மதிரச்
† சிலைத்தோ ளாடவர் செருவேற் றடக்கையர்
கறைத்தோன் மறவர் கடுந்தே ரூருநர்
வெண்கோட் டியானையர் ‡ விரைபரிக் குதிரையர்
மண்கண் கெடுத்தவிம் மாநிலப் பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
§ விளங்குகொடி நந்தின் வீங்கிசை நாவு
நடுங்குதொழி லொழிந்தாங் கொடுங்கியுள் செறியத்
தாருந் தாருந் ‖ தாமிடை மயங்கத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோண் மறவ ருடற் ¶ பொறை யடுக்கத்
தெறிபிண மிடறிய குறையுடற் கவந்தம்
[2] ** பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்
[3] பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்
கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட
†† வடுந்தேர்த் தானை யாரிய வரசர்

ககசு. பாண்டில் - கஞ்சதாளம்.

ககரு. மாதிரமதிர்தல் - இவை அதிரத் தானுமதிர்தல்.

ககசு-ரு. முரசமுதலிய இவையிற்றோடு. ககஅ கறைத்தோல்-கருங்கடகு.

உ0உ. கொடிநந்து - கொடியும் சங்கும் முகத்துக்கட்டுவர்போலும்; 'சங் கின்நா' என்றூர், பேசுதலால்; ஒலிபற்றி.

உ0ரு. ஒழிந்து - ஒழிய. உள்ளேதுகள்செறிய.

உ0சு. உடற்பொறை- உடற்பாரம். உ0எ. எறிபிணம்-வெட்டுண்டபிணம்.

உ0அ. பேய்மகள் தாளத்துக்கு ஆட.

[1] ககரு-சு. "உயிர்ப்பலியுண்ணு முருமுக்குரன்முழக்கத்து, மயிர்க்கண்முரசு" (சிலப். ௫: அஎ - அ); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாதுபோர்த்த, மயிர்க்கண் முரச மோவில கறங்க" (மதுரை. எஙஉ-௩.); 'உருமிடி முரசமொடு' (முருகு. கஉக;) "ஏற்றுரி போர்த்த......முரசு" (மணி. க; உசு - ககு; "சாற்றிடங்கொண்ட வேற்றுரி முரசம்", "ஏற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்கு" (பெருங். க. ௩அ: க00; ௫. ௫ சக: ககரு:): "ஏற்றுரிமுரசநாண" சீவக. உகசஉ.

[2] "பேய்க்க ணன்ன பிளிறுகடி முரசம்" பட்டினப். உகக.

[3] "கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப், பிணந்தின் யாக்கைப்பேய் மகள்" பட்டினப். உ௫சு - சு0.

(பி - ம்.) * 'இடிக்கண்' † 'சிலைக்கோளாடவர்' ‡ 'விடுபரி' § 'விளங்கொளி நந்தின்' ‖ 'தம்மிடை' ¶ 'பொறியடுக்கத்' ** 'பறைக்குரற்பேய்' †† 'நெடுந் தேர்த்தானை'

கடும்படை மாக்களைக் கொன்று களங் * குவித்து
நெடுந்தேர்க் கொடுஞ்சியுங் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட
[1] வெருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை
யொருபக லெல்லையி னுண்ணு மென்ப
[2] தாரிய வரச ரமர்க்களத் தறிய
நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
[3] யோங்கிருஞ் சென்னி மேம்பட † மலைய
வாய்வா ளாண்மையின் வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசயனு
மைம்பத் திருவர் கடுந்தே ராளரொடு
செங்குட் டுவன்றன் சினவலைப் ‡ படுதலுஞ்
[4] சடையின ருடையினர் சாம்பற் பூசினர்
பிடிகைப் பீலிப் பெரு § நோன் பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளினா
ராடு கூத்த ராகி யெங்கணு
மேந்துவா ளொழியத் தாந்துறை போகிய
விச்சைக் கோலத்து வேண்டுவயிற் படர்தரக்
கச்சை யானைக் காவலர் நடுங்கக்

௨௧௫; எருமையாகிய பரியூர்வோன் - கூற்றுவன்.
௨௧௮. [5] நூழிலாட்டுவதாக.
௨௨௧. வாயவாளாண்மை - வாய வறிது இராமை.
௨௨௫. உடையினர் - காஷாயமுதலிய உடையினர் = சந்நியாசிகள்.

[1]. ௨௧௫ - அ. "மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையு, நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய" புறநா. ௧௯.

[2]. ௨௧௭ - அ. "ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பணித்தோன் வஞ்சி" அகநா. ௧௯௬.

[3]. "ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த" பொருந. ௧௪௩.

[4]. ௨௨௫ - அ. "மீனாய் வேலையை யுற்றார் சிலர்சிலர் பசுவாய் வழிதொறு மேய்வுற்றார், ருனர் பறவையின் வடிவுற் றார்சிலர் சிலர்நான் மறையவ ருருவானார், மானார் கண்ணின மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்றார், ரானார் சிலர்சில ரையா நின் சரணென்றார் நின்றவ ரரியென்றார்" (கம்ப. அக்க. ௪௦) என்னுஞ் செய்யுள் இவ்வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலது.

[5]. நூழிலாட்டு - கொன்று குவித்தல்; மலைபடு. ௮௭ - ந.

(பி - ம்.) * 'குவித்து நூழிலாட்டிய' † 'மலைந்துவாய் வாளாண்மையின்
‡ 'பதித்தலும்' § 'நோன்பாளரிற்பாடு' || 'படர்ந்தகச்சை'

* [1] கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
† வாளழி வாங்கி யதரி திரித்த
வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தித்
தொடியுடை நெடுங்கை தூங்கத் தூக்கி
முடியுடைக் கருந்தலை ‡ முந்துற வேந்திக்
[2] கடல்வயி றுகலக்கிய ஞாட்புங் கடலக
த்திலங்கையி லெழுந்த சமரமுங் கடல்வணன்
றேரூர் செருவும் பாடிப் பேரிசை
முன்றேர்க் குரவை முதல்வனை வாழ்த்திப்
பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை
[3] முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித்
தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு
மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்ட

உ௩௨. யானை எருதாக வாள் பிடிக்குங் கோலாக.

உ௩௩. ஆளழிவாங்கி - ஆளாகிய போரை இறங்கவிட்டு. அதரிதிரித்த - கடாவிட்ட.

உ௩௫. தொடிக்கை - பேய்க்கை. தூங்க அசைய.

உ௩௬. முந்துற - முன்னாக.

உ௩௭-௯. கடல்வயிறு கலக்கிய போர்முதல் மூன்றும் மாயவன் செய்தன. இவை மேலேறிப் பூவைநிலையாறபாடுதல்.

உ௪௦ - ௪௧. முன்றேர்க்குரவையிலே முதல்வனை வாழ்த்திப் பின்றேர்க்குரவையிலே ஆடுதலிற பேய்க்குரவையாயிற்று.

உ௪௨. பிடர்த்தலையாகிய தாழி

உ௪௪. பேயவாலுவன் - பேய்க்குச்சோறிடு மடையன்.

1. "யானையெருத்தின் வாண்மட லோச்சி, யதரி திரித்த" புறநா. ௬௭௧.

2. உ௬௭-௯. ௫௪௭-ம் பக்கத்து, ௮-௧௦-அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

3. "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண்குருதி, சினத்தீயிற் பெயர்பு பொங்கத், தெறலருங் கடுந்துப்பின், விறலவிளங்கிய விழுச்சூர்ப்பிற், றொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவ, னடியொதுங்கிப் பிற்பெயராப், படையோர்க்கு முருகயர" (மதுரை. உ௯-௩௮); "முடித்தலை யடுப்பாகப் புனற்குருதி யுலைக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சி" புறநா. உ௬.

(பி - ம்.) * 'கோட்டுமாபூட்டி' † 'வாளரிவாங்கியதிரிதிரித்த' ‡ 'முன்னுற வேந்தி'

சிறப்பூண் கடியினஞ் செங்கோற் கொற்றத்
தறக்களஞ் செய்தோ னூழி வாழ்கென
மறக்கள முடித்த வாய்வாட் குட்டுவன்
வடதிசை மருங்கின் மறைகாத் தோம்புநர்
தடவுத்தீ யவியாத் தண்பெரு வாழ்க்கை
காற்றா தாளரைப் போற்றிக் காமினென
வில்லவன் கோதையொடு வென்றுவினை முடித்த
பல்வேற் றானைப் படைபல வேவிப்
பொற்கோட் டிமயத்துப் * பொருவறு பத்தினிக்
கற்கால் கொண்டனன் காவல னாங்கென்.



உசக. வாழ்க்கையென்றது, முன்புவந்த ஆகாசசாரிகள் சொன்ன வார்த்தையை நினைந்து.

உருo. காற்றா தாளரை நீர் போற்றிக் காமினெனச் சொல்லி.

உருச. கால்கொள்கையாவது - கடவுள் வடிவெழுதத்தொடங்குதல்.

(உருக) வில்லவன் கோதையோடே (உருஉ) படையையேவிக் (உருச) கற்செய்தலை அடிக்கொண்டான்.

உகூ.— † கால்கோட்காதை முற்றிற்று.



1. உசஅ-கூ. "அருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர், பெருநில மன்ன பேணனின் கடனென்று" சிலப். உகூ: கoஉ-கூ.

(பி - ம்.) * 'பொதுவறு' † 'கற்கால்கொள்காதை'

# இருபத்தேழாவது
# நீர்ப்படைக்காதை.



வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடி யேற்றிச
செறிகழல் வேந்தன் றென்றமி ழாற்ற
லறியாது மலைந்த வாரிய மன்னரைச
செயிர்த்தொழின் முதியோன் செய்தொழில் பெருக
வுயிர்த்தொகை * யுண்ட வொன்பதிற் றிரட்டியென்
றியாண்டு மதியு நாளுங் கடிகையு
மீண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள
வருபெருந் தானை மறக்கள மருங்கி
னொருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட
செங்குட் டுவன்றன் † சினவேற் றானையொடு
கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நூற் ‡ றிறன் மாக்களி னீர்ப்படை செய்து

உ. கடவுட்பத்தினி - பத்தினியாகிய கடவுள்.

எ. செயிர்த்தொழின் முதியோன் - கூற்றுவன்.

அ - ௰. [1] உயிர்த்தொகை உண்டனவாகிய ஆண்டும் மதியும் நாளும் கடிகையும் ஒன்பதிற்றிரட்டியென்று அவற்றோடே கூட்டியெண்ண = தேவாசுர யுத்தம் பதினெட்டாண்டிலும், இராமராவண யுத்தம் பதினெட்டுமாதத்திலும், பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென் றெண்ண.

(௬) மன்னரை (௧௨) உயிர்த்தொகையுண்ட (௧௩) செங்குட்டுவன்.

---

[1]. 'இவ்வுரைக்குறிப்பு' "எண்கொண்டனாட்பு" (சீவக. ௨௧௫௩) என்னும் மூலத்தாலும், அதற்கு, 'தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் என்கின்றமேபோர்' என்றெழுதிய உரையாலும், "தேவாசுர ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே" (கலிங்க. களம். ௧) என்பதனாலும் அழகுற்றுப் பொருட்டொடர்புபெற்று விளங்குதல் காண்க.

(பி - ம்.) * 'உண்டனனென்பதிற்' † 'செருவேல்', ‡ 'திறமாக்கள்'

மன்பெருங் கோயிலு மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரு
முரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையுந்
திருமலர்ப் பொய்கையும் வரிகா ணரங்கமும்
பேரிசை * மன்னர்க் கேற்பவை பிறவு
மாரிய மன்ன ரழகுற வமைத்த
தெள்ளுநீர்க் கங்கைத் தென்கரை யாங்கண்
வெள்ளிடைப் பாடி வேந்தன் புக்கு
நீணில † மன்னர் நெஞ்சுபுக லழித்து
‡ வானவ மகளிரின் வதுவைசூட் டயர்ந்தோ
ருலையா வெஞ்சம மூர்ந்தம ருழக்கித்
தலையுந் தோளும் விலைபெறக் கிடந்தோர்
நாள்விலைக் கிளையு ணல்லம ரழுவத்து
வாள்வினை முடித்து மறத்தொடு § முடிந்தோர்
குழிகட் பேய்மகள் குரவையிற் றொடுத்து
வழிமருங் கேத்த வாளொடு மடிந்தோர்
கிளைக டம்மொடு கிளர்பூ ணாகத்து
வளையோர் மடிய மடிந்தோர் மைந்தர்
மலைத்துத் தலைவந்தோர் வாளொடு மடியத்
தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்
திண்டேர்க் கொடுஞ்சியொடு தேரோர் வீழப்
புண்டோய் குருதியிற் பொலிந்த மைந்தர்
மாற்றருஞ் சிறப்பின் மணிமுடிக் கருந்தலைக்

---

௨௪. வெள்ளிடைப்பாடி - வெளியான நிலத்துப் பாசறை.

௨௬. தெய்வமகளிரால் மாலைசூட்டப் பட்டோராவார் - வீரஞ்செய்துபட்டவர்.

௨௭. ஊர்ந்து - அடர்ந்து.

௨௮. விலைபெற - அரசர் கண்டு நேயத்தோராம்படி.

௨௯. அமரழுவம் - சமரபூமிப்பரப்பு.

௩௦. வாளாற்செய்யும் வினைகளெல்லாவற்றையுஞ் செய்துமுடித்து.

௩௨. வழிமருங்கேத்த - வழியிலுள்ளாரையேத்த.

௩௩. கிளைகள் - போரில் உடனின்று பட்டவர்கள்.

௩௩-௪. உறவான வீரர் தம்மொடு மடிந்தோர்; ஸ்திரீகள்மடிய மடிந்தோர்.

௩௬. தலைத்தார் - தூசி. வாகையணிந்தோர் - மாற்றார் புறத்தைத் தாங்கள் பெற்றவளவிலே மீண்டோர்.

---

(பி - ம்.) * 'மன்னற்கொப்பவை' † 'மறவர்நெஞ்சு' ‡ 'வானவர்மகளிரின்' § 'மடிந்தோர்'

கூற்றுக்கண் ணோட வரிந்துகளங் கொண்டோர்
நிறஞ்சிதை கவயமொடு நிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வாண் மறவர்
வருக தாமென [2] வாகைப் பொலந்தோடு
பெருநா ளமயம் பிறக்கிடக் கொடுத்துத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்துப்
[3] பாடுதுறை முற்றிய கொற்ற வேந்த
னாடுகொண் * மார்போ டரசுவிளங் கிருக்கையின்
மாடல மறையோன் வந்து தோன்றி
வாழ்க வெங்கோ மாதவி மடந்தை
கானற் பாணி கனக விசயர்தம்
முடித்தலை † நெரித்தது முதுநீர் ஞால
மடிப்படுத் தாண்ட வரசே வாழ்கெனப்
பகைப்புலத் தரசர் ‡ பலரீங் கறியா
நகைத்திறங் கூறினை நான்மறை யாள
யாதுநீ கூறிய § வுரைப்பொரு ளீங்கென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குங்
கானலந் தண்டுறைக் கடல்விளை யாட்டினுண்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோ
டூடற் காலத் தூழ்வினை யுருத்தெழக்

---

சச. பெரியநாளிற் கொடுக்கும் பொழுது ஒழிய நெடும்பொழுதிருந்து கொடுத்து; 'பெருநாள்' என்றது, கொடுக்கிறநாளாதலால்

(உகூ) 'வதுவை சூட்டயர்ந்தோர்' முதல் (கூச) 'வளையோர் மடியமடிந்தோர்' இறுதி பட்டவர்களையெண்ணி இவர்கள் மைந்தரென ஒரெண்ணாக்கி, மேல் படாதுபொருது வென்றவர்களையுங் கூட்டியெண்ணி இவர்களுக்கு(சஙு-ச) வாகைகொடுத்தென்றது.

சசு. வீரரைப்பாடும் புறத்துறையெல்லாம் முடித்துப் பாட்டுண்ட வேந்தன்.

சஎ. வெற்றிகொண்ட மார்போடே.

ருக-ச. மாற்றரசர் பலரும் அறியாத சிரிப்பினைகூறென்றது, (ருக) நெரித்ததென்றதனை. 'நானறியாத நகை' என்னாது 'மன்னர் பலருமறியாத' என்றான், இராசபாவத்தாலே

1. "கூற்றுக்கண்ணோடிய வெருவருபறந்தலை" புறநா. கக.
2. சிலப். உகூ: எO-எக - ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.
3. "பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்வி" சிறுபாண். உஉஅ.

(பி - ம்.) * 'மகளிரோடரசு' † 'ஏற்றி' ‡ 'பரிசீங்கறியாது' § 'உரையீங் கென்னை'

கூடாது * பிரிந்து குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரை புக்காங்
கிலைத்தார் வேந்த † னெழில்வா னெய்தக்
[1] கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
[2] குடவர் கோவே நின்னாடு புகுந்து
வடதிசை மன்னர் மணிமுடி ‡ யேறினை
யின்னுங் கேட்டரு ளிகல்வேற் றடக்கை
மன்னர் கோவே யான் § வருங் காரணை
மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வே
னூழ்வினைப் பயன்கொ லுரைசால் சிறப்பின்
வாய்வாட் டென்னவன் மதுரையிற் சென்றேன்
வலம்படு தானை மன்னவன் றன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை யென்றலுந்
[3] தாதெரு மன்றத்து மாதரி யெழுந்து
கோவலன் றீதிலன் கோமகன் பிழைத்தா
னடைக்கல மிழந்தே னிடைக்குல மாக்காள்
குடையுங் கோலும் பிழைத்த வோவென
விடையிரு ளியாமத் தெரியகம் புக்கதுந்
தவந்தரு சிறப்பிற் || கவுந்தி சீற்ற
நிவந்தோங்கு செங்கோ னீணில வேந்தன்
போகுயிர் ¶ தாங்கப் பொறைசா லாட்டி
** யென்னோ டிவர்வினை யுருத்த தோவென
[4] வுண்ணா நோன்போ †† டுயிர்பதிப் பெயர்த்ததும்
பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்
குற்றது மெல்லா மொழிவின் றுணர்ந்தாங்

எஎ. 'பிழைத்தவோ' என்றாள், முன் பிழையாமைபற்றி.

எக. சீற்றம் - சீற்றத்தை.

அக. சபியாதபடி தணித்தது அவன் மரணம்.

அரு. ஊணும் மாற்றிப்போய்.

---

1. சிலப்பதி. கக. 2. "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை" மணி. உஅ: ௧0௧.

3. தாதெருமன்றம்: சிலப். ப. ௪௪எ.

4. "உயிர்பதிப் பெயர்த்தமை யுறுக" (சிலப். உரு: கஎ); "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" மணி. கச: கரு

(பி - ம்.) * 'பிரிந்த' † 'உயர்வானெய்த' ‡ 'ஏற்றினை' § 'வருகாரணமமரமுனி வரைமலை, || 'கவுந்தியடிகளிவந்து' ¶ 'தாங்காப்பொறை' ** 'என்னொடுவேர்வினை, †† 'உயர்பதிப் பெயர்த்ததும்'

கென்பதிப் பெயர்ந்தே னென்றுயர் * போற்றிச்
செம்பியன் மூதூர்ச் சிறந்தோர்க் † குரைக்க
மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ்
செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி
‡ மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங்
[1] கிந்திர விகார மேழுடன் புக்காங்
கந்தர சாரிக ளாறைம் § பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவுந்
துறந்தோன் மனைவி மகன்றுயர் பொறாஅ
ளிறந்ததுய ரெய்தி யிரங்கிமெய் விடவுங்
கண்ணகி தாதை கடவுளர் கோலத்
தண்ணலம் பெருந்தவத் [2] தாசீ வகர்முன்
புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவுந்
தானம் புரிந்தோன் றன்மனைக் கிழத்தி
** நாள்விடூஉ நல்லுயிர் நீத்துமெய் விடவு
மற்றது கேட்டு [3] மாதவி மடந்தை

௯௨. இந்திரவிகாரம் - இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்கு.

௯௩ - ௫. ஆறைம்பதின்மர், அவர் தாம் முன்பு பிறந்து வருகிற யாக்கை யது பிறப்பறமுயன்று துறந்தாரென்று விசேடணம்.

௧0௨. நாள்விடூஉ - நாளைவிட்டு; வினையெச்சம்.

[1]. ௯௨-௩: "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்று,மிந்திர விகார மேழுடன் போகி" (சிலப். ௧0: ௧௩ - ௪): "இந்திர விகார மேழுமேத் துதலின்", "அந்தர சாரிக ளமர்ந் தினி துறையு, மிந்திர விகார மெனவெழில் பெற்று" மணி. உ௬: ௫௫; உ௮: ௬௯-௭0.

[2]. ஆசீவகம் - சமணமதத்தின் பாகுபாடுகளுள் ஒன்று; இம்மதத்தினர்க்குத்தெய் வம் 'மற்கலி' என்றும், நூல் 'நவகதிர்' என்றும் கூறுவர்; "என்றநு மற்கலிதானே பிறையினி, பொன்பது வாங்கதிர் நூல்யா முடையன, மன்பெரு நுண்பொரு ளைத்தி யல் பாயவை, யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல" நீலகேசி. ஆசீவக. ௧௩.

[3]. ௧0௩ - ௮, கோவலன் இறந்தமை கேட்டு மாதவி பௌத்தப்பள்ளியை யடைந்து அறவு பூண்டமை, "போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியத்தா னம் புரிந்த, மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழி" (சிலப். உ௯. "காதலன்றன்"); "ஈங்கிம் மாதல ருறைவிடம் புகுந்தேன், மறவண நீத்த மாசறு கேள்வி, யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து, மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக், காதலனுற்ற கடுந் துயர்கூற......உரவோ னருளினன்", "கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி, மாதவி மாதவர்பள்ளியு ளடைந்ததும்" (மணி. உ: ௫௯ - ௬௬; ௧௮: ௭ - ௮.) என்னு மிடங்களிலும் கூறப்பட்டுள்ளது.

(பி - ம்.) * 'போலச்' † 'உரைப்ப' ‡ 'மாபெருந்தான மாண்பொருளீய்த் தாங்கு' § 'பதின்மர்முன்பிறந்த' ‖ 'இறந்துயிர்நீங்கி' ** 'தாள்வீடு'

* நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
[1] மணிமே கலையை வான்றுய ருறுக்குங்
கணிகையர் கோலங் † காணு தொழிகெனக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவு
மென்வாய்க் கேட்டோ ரிறந்தோ ருண்மையி
னன்னீர்க் கங்கை ‡ யாடப் போந்தேன்
மன்னர் கோவே வாழ்க வீங்கெனத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்த
வாடா வஞ்சி வானவர் பெருந்தகை
மன்னவ னிறந்தபின் வளங்கெழு சிறப்பிற்
§ றென்னவ னாடு செய்ததீங் குறையென
நீடு வாழியரோ நீணில || வேந்தென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குமின்
மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
வொத்த ¶ பண்பின ரொன்பது மன்ன
ரிளவரசு பொறாஅ ரேவல் ** கேளார்
வளநா டழிக்கு மாண்பின ராதலி
[2] னொன்பது குடையு மொருபக லொழித்தவன்

கoச. நற்றிறம்படர்கேன் நற்றிறம் படரக்கடவேன.

கoரு - சு. மணிமேகலையைக் கணிகையர்கோலங் காணுதொழிகவென று நற்றாயக்குச் சொல்லி துன்பத்தைச் செய்யும கணிகையர் கோலமென்றான், அக்கோலத்தால் தான் துன்பமுறுதலால

கஅ - ககo. அவர்கள் இப்படிச் செயயா நிறக அவரின் இறநதோருண்டாகையாற், கங்கையாடபபோநதேனென்றான்.

கககூ. ஈங்கு - இப்பூமியின். ககச. மனனவன - பாண்டியன.

ககஎ. தவற்றால ஒத்தபண்பினையுடையர்

[1]. கoசு - அ. "மணிமேகலை அருந்தவப் படுத்த லல்ல தியாவதுந், திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்" மணி. உ: ருசு - எ.

[2]. "ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை, நேரி வாயி னிலைச்செரு வென்று" (சிலப். உஅ: ககஅ-எ): "ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோ, ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து, நிலைச்செருவி னாற்றலை யறுத்து" பதிற். ரு-ஆம்பத்துப்பதிகம்.

(பி - ம்) * 'நற்றவர் தமக்கு நற்றவம் படாகென' † 'காணுயதேர்கென' ‡ 'ஆடியபோந்தேன்' § 'தென்னவநன்னாடு' || 'வேந்தென்றமாடல' ¶ 'பண்பினென்பது' ** 'கொள்ளார்'

பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்
[1] பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு
வேம்புமுத றடிந்த வேந்துவா ளலத்துப்
போந்தைக் கண்ணிப் பொறைய கேட்டருள
[2] கொற்கையி லிருந்த * வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்லர் † ஈரைஞ் ஞூற்றுவ
ரொருமுலை குறைத்த திருமா பத்தினிக்
கொருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி
யுரை ‡ செல வெறுத்த மதுரை மூதூ
[3] ரரைசுகெடுத் தலமரு மல்லற் காலைத்
தென்புல மருங்கிற் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கு முறைமுதற் கட்டிலி
னிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
வொருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறின
[4] னூழிதொ றூழி யுலகங் காத்து
வாழ்கவெங் கோ வாழிய பெரிதென
மறையோன் கூறிய மாற்ற மெல்லா
மிறையோன் கேட்டாங் கிருந்த வெல்லையு
ளகல்வாய் ஞால மாரிருள் விழுங்கப்

---

கஉச - ரு பழையன - குறுநிலமன்னன், அவன வேம்பு.

கஉஅ ஈரைஞ்ஞூற்றுவா - ஆயிரவரை

கஙக புகழ் செல்லும் பரக்கும்படி மிக்க மதுரை

[1]. "பழையன்காக்குங் கருஞ்சினைவேம்பின், முரரை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற். ரு-ஆம் பத்துப் பதிகம்); "மோகூர்ப், பணியா மையிற் பகைதலை வந்த; மாகெழு தானை வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த" (அகநா. உருக,) 'பழையன்மோகூர்" மதுரை. ருOஅ.

[2]. "கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப் பொற்கொல்லராயிர வரைக்கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந்துன்பமுநீங்கியது" சிலப். உரைபெறுகட்டுரை, க.

[3]. மூ: சிலப்பதிகாரம், ௯: அ. [4]. சிலப்பதிகாரம், ௬O: கசரு.

(பி - ம்.) * 'இளங்கோச்செழியன்' † 'ஈரைந்தூற்றுவரை' ‡ 'செலவறுத்த'

பகல்செல * முதிர்ந்த படர்கூர் மாலைச்
செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க
வந்திச செக்கர் வெண்பிறை தோன்றப்
பிறையேர் வண்ணம் பெருந்தகை நோக்க
விறையோன் செவ்வியிற் கணியெழுந் துரைப்போ
னெண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது
மண்ணாள் வேந்தே வாழ்கென் றேத்த
[1] நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த
கொடும்பட நெடுமதிற் † கொடித்தேர் வீதியுட்
[2] குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
வுறையுண் முடுக்க ரொருதிறம் போகி
‡ வித்தகர் கைவினை விளங்கிய கொள்கைச்
சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்
கோயி லிருக்கைக் கோமக னேறி
வாயி லாளரின் மாடலற் § கூஉ
யிளங்கோ வேந்த || னிறந்ததற் பின்னர்
வளங்கெழு நன்னாட்டு மன்னவன் கொற்றமொடு
செங்கோற் றன்மை தீதின் றோவென
வெங்கோ வேந்தே வாழ்கென் றேத்தி
மங்கல மறையோன் மாடல னுரைக்கும்
வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப

கசசு - கூ. தன்னியல்பு முதிர்ந்த மாலையாகிய செந்தீப்பரந்த மேலைத் திசை விளங்கப் பிறைதோன்ற.

கசஎ. பிறையெழுந்தபடியை. கருக. நிரல் - ஒழுங்கு.

கருஉ. படம் - படங்கு. படங்கை மதிலாகவுடைய வீதி.

கருச. உறையுள் - உறையுமிடம். கருரு. பீடிகை - சிங்காதனம்.

கருசு. இளங்கோவேந்தர் - பட்ட வொன்பதின்மர்.

1. "நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லை. சச); "கண்டப் பூத்திரை காழ் முதற் கொளீஇ" பெரும். உ. ச: ககச.

2. "குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன" மணி. கூ: ௫அ.

(பி - ம்) * 'முரஞ்சிய' † 'கொடித்தேர்வீதியிற்' ‡ 'வித்தகன்' § 'கூவி' || 'இறந்தபின்னர்'

¹ வெயில்மூன் * றெறிந்த விகல்வேற் கொற்றமுங்
² குறுநடைப் புறவி னெடுந்துயர் தீர
வெறிதரு பருந்தி னிடும்பை நீங்க
வரிந்துடம் பிட்டோ னறந்தரு கோலுந்
திரிந்துவே றாகுங் காலமு முண்டோ
தீதோ வில்லை செல்லற் காலையுங்
³ காவிரி புரக்கு நாடுகிழ வோற் † கென்
றருமறை முதல்வன் சொல்லக் கேட்டே
பெருமகன் மறையோற் பேணி யாங்கவற்
காடகப் ‡ பெருநிறை யையைந் திரட்டித்
தோடார் போந்தை வேலோன் றன்னிறை
மாடல மறையோன் கொள்கென § றளித்தாங்
⁴ காரிய மன்ன ரையிரு பதின்மரைச்
சீர்கெழு நன்னாட்டுச் செல்கவென் || றேவித்
⁵ தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த
மாபெருந் தானை மன்ன குமரர்

௧௭௪. ஐம்பது துலாப்பாரம் பொன்.

௧௭௭ ஐயிருபதின்மர் - முன்சொன்னகனக ...

¹. "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்" (சிலப். ௨௯: "வீங்குநீர்")— 'ஒன்னாருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்" (புறநா. ௩௯.); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்குமெயிலுந் தொலைத்தலால்," (பழ. ௪௯); "ஒன்னார், ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந், தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்" (சிறுபாண். ௭௯-௮௨); 'தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (மணி. ௧: ௪); "தேங்கு தூங்கெயி லெறிந்த வவனும்" (கலிங்கத்து. இராச. ௭); "வாங்குந் திருக்கொற்ற வாளொன்றின் வாய்வாய்ப்பத், தூங்கும் புரிசை துணித்த கோன்" (இராசராசசோழனுலா, ௧௩); "தூங்கு மெயிலெறிந்த சோழனும்" விக்கிரமசோழனுலா, ௯

². புறவின் துயர்தீர்த்த குறிப்பின்விரிவை, இப்புத்தகம் ௪௮௩-ஆம் பக்கத்திலுள்ள ௩-ஆம் அடிக்குறிப்பிற்காண்க.

³. "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" பொருந. ௨௪௮.

⁴. சிலப்பதிகாரம், ௨௬: ௧௯௩. ⁵. சிலப்பதிகாரம், ௨௬: ௨௨௫-௬.

(பி - ம்.) * 'எறிந்தவியறேர்க்கொற்றக்' † 'எனவருமறை' ‡ 'பசுநிரை' § 'அளித்தாங்கு' || 'ஏவிக், கருங்கயனெடுங்கட் கவின்பெறுகாதில் விரிவெண்'

சுருளிடு தாடி மருள்படு பூங்குழ
லரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண்
விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை யாடமைப் பணைத்தோள்
வளரிள வனமுலைத் * தளரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி யாரியப் பேடியோ
டெஞ்சா † மன்ன ரிறைமொழி மறுக்குங்
கஞ்சுக முதல்வ ரீரைஞ் ஞாற்றுவ
ரரியிற் போந்தை பருந்தமி ழாற்ற
றறியாது மலைந்த கனக விசயரை
யிருபெரு வேந்தர்க்குக் ‡ காட்டிட வேவித்
திருந்துதுயில் கொள்ளா வளவை யாங்கணும்
பரம்புநீர்க் கங்கைப் பழனப் பாசறைப்
பயிலிளந் தாமரைப் பல்வண் டியாழ்செய
வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குணதிசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்
குடதிசை யாளுங் கொற்ற வேந்தன்
வடதிசைத் தும்பை வாகையொடு § முடித்துத்
தென்றிசைப் || பெயர்ந்த வென்றித் தானையொடு
நிதிதுஞ்சு வியனகர் நீடுநிலை நிவந்து

---

கஅக. தாடி - மோவாய்.

கஅரு. வெண்டோடு - சங்கினாற் செய்த காதாபரணம்.

கஅஎ. எஞ்சாமன்னர், மறத்திற்குறையாத மன்னர்.

கஅஎ - அ இறைமொழிமறுக்குங் கஞ்சுகமுதல்வர் - மேலான வார்த்தை பொறாது மறுத்துரைக்குந் தூதர்

கஅகூ. அரியில்-அரிதாலில் ஆற்றல்-இவர்களைவென்று கைக்கொண்டவலி.

கஅஅ - கூக தூதர் காட்டிட வேவி.

ககஉ. கொள்ளாவளவை, கடுமைகூறிற்று

ககரு. கங்கையைச்சூழ்ந்த பழனம் உoo. நகர் - கோயில்

[1]. கஅக-கூ. பேடி: "சுரியற் றாடி மருள்படு பூங்குழற், பவளச் செவ்வாய்த் தவள வாணகை, யொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக், கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற், காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை, யகன்ற வல்குலந் நுண் மருங்கு, லிகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து, வாணன்பேரூர் மறுகிடைத் தோன்றி, நீணில மளந்தோன் மகன்முன் னாடிய, பேடிக் கோலத்துப் பேடு" மணி. ௩: ககக - உ௫.

(பி - ம்.) * 'தளிரிளமின்னிடை' † 'மன்னர்க்கிறைமொழியிறுக்கும்' ‡ 'காட்டிடவே வீ' § 'முடித்தோன்' || 'பெயர்ந்தனன்'

கதிர்செல வொழித்த * கனக மாளிகை
முத்து † நிரைக் கொடித்தொடர் முழுவதும் வளைஇய
சித்திர விதானத்துச் செய்பூங் கைவினை
யிலங்கொளி மணிநிரை யிடையிடை வகுத்த
‡ விலங்கொளி வயிரமொடு பொலந்தகடு போகிய
மடையமை செறிவின் வான்பொற் கட்டிற்
புடைதிரண் டமளியப் பொற்கா § லமளிமிசை
[1] யிணைபுணர் எகினத் திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்
கெறிந்துகளங் கொண்ட வியறேர்க் கொற்ற
மறிந்துரை பயின்ற வாயச் செவிலியர்
தோட்டிணை துறந்த துயரீங் கொழிகெனப்
பாட்டொடு தொடுத்துப் பல்லாண்டு வாழ்த்தச்
[2] சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று
பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தா
ணறுமலர்க் கூந்த ஞாளணி பெறுகென
வமைவிளை தேறன் மாந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் ** காவல் கைவிட
வீங்குபுன முணீஇய வேண்டி வந்த
†† வோங்கியல் யானை தூங்குதுயி லெய்த
வாகை துமபை வடதிசைச் சூடிய
வேக யானையின் வழியோ நீங்கெனத்

௨0௧. மாளிகை - அந்தப்புரம். கதிர்செலவொழித்தல் - உயர்தல்.

௨0௨. கொடித்தொடர் - சல்லியும தூக்கும்.

௨0௫. விலங்கொளி - பக்கமோடுகிற ஒளி. பொலந்தகடு - பொற்றகடு. போகிய - ஒழுகிய.

௨0௯. துயிலைப்போக்கி.

௨௧௬. கூந்தல் நாளொப்பனைபெறுக. என - என்று சொல்ல.

1. சிலப். ௪: ௬௬; நெடுநல். ௧௩௨; கலி. ௭௨.

2. "கூனுங் குறளு மூமுங் கூடிய குறுந்தொழி விளைஞர்". "கூனுங் குறளுங் கொண்டன" (சிலப். ௨0: ௭, ௨௮: ௫௮) பெருங். ௧. ௧0௯: ௨௯ - ௧௧.

(பி - ம்.) * 'தமனியமாளிகை' † 'நிரைத்தொடர் முழுவதும் வளைஇச் ‡ 'விளங்கொளி..........தகடுபோக்கி மடையமை செறிவனவான பொற்றகட்டிற்' § 'அமளியிணை' ‖ 'இனமயிர்' ** 'காவலன்' †† 'வாங்குநிலையானைதூங்குதுயில்'

திறத்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்
குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்
வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்
கவடி வித்திய கழுதையே ருழவன்
குடவர் கோமான் வந்தா னாளைப்
படுநுகம் பூணாய் பகடே மன்னர்
அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனுந்
[2] தொடுப்பே ருழவ ரோதைப் பாணியுந்
* தண்ணான் பொருநை யாடுந ரிட்ட
வண்ணமுஞ் சுண்ணமு மலரும பரந்து
விண்ணுறை விற்போல் விளங்கிய பெருந்துறை
வண்டுண மலர்ந்த மணித்தோட்டுக் குவளை
முண்டகக் கோதையொடு முடித்த † குஞ்சியின்
முருகுவிரி தாமரை முழுமலர் ‡ தோயக்
குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து
வில்லவன் வந்தான் வியன்பே ரிமயத்துப
பல்லா னிரையொடு படர்குவிர் நீரெனக்
காவல னாநிரை நீர்த்துறை § படீஇக்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலை வாலுகத்துக்
குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தங்

(உகஅ) காவலைகைவிடுதலாற் (உகக) புனமுண்ணவந்த (உஉ0) யானை துயிலெய்தப் (உஉச) பாடிய குறிஞ்சிப்பாடலும்

உஉஅ. பூணாய - பூண்டல் செய்வாய். பகடே. விளி.

உஉக. வெள்ளணி - பிறந்தநாளொப்பனை.

உ௩0. தொடுப்பேருழவர் - விளாக்கொண்டு உழுமுழவர்; ஏருழவர், ஒரு சொல்.

உ௩க. பல்லானிரை - வடக்கு நின்றும் கொண்டு போந்த நிரை; அவற்றோடு நீருஞ்சேர்வீர்.

உச0. படீஇ - படுத்தி    உசக. புன்னை - புன்னையிடத்தே.

[1]. பதிற். எகு; புறநா. கூ, ககஉ; பு-வெ. உழிஞை. உகூ.

[2]. தொடுப்பு - விதைப்புமாம்; 'தொடுப்பினாயிரம் வித்தியதுவிளைய' (மதுரை கக); "தந்துநீரடைகரைச் சங்குழுதொடுப்பின் முத்துவிளைகழனி' மணி. அ; - க.

(பி - ம்.) * 'தண்ணம்பொருநை' † 'குஞ்சியன்' ‡ 'தேய' § 'படியாக் கோவலர்'

கழங்காடு மகளி ரோதை யாயத்து
வழங்குதொடி முன்கை மலர வேந்தி
வானவன் வந்தான் வளரிள வனமுலை
தோணல * முணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுது மடவீர் யாமெனு
மஞ்சொற் † கிளவிய ரந்தீம் பாணியு
மோர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி
வால்வளை செறிய வலம்புரி வலனெழ
மாலைவெண் குடைக்கீழ் வாகைச் சென்னியன்
வேக யானையின் மீமிசைப் பொலிந்து
[1] குஞ்சர வொழுகையிற் கோநக ரெதிர்கொள
‡ வஞ்சியுட் புகுந்தனன் செங்குட் டுவனென்

(௨௪௬) 'ஏந்தி' என்னும் வினையெச்சம் (௨௪௯) 'எனும்' என்னும் பெயரெச்ச வினையோடு முடிந்தது.

௨௪௮. உணீஇய - உண்ணும்படி.

(௨௪௮) உண்ணும்படி (௨௪௯) பாடுதுமெனக

பாட்டால் தம்மிடத்து வருவானென்று. (௨௪௪ - ௫௦) குறிஞ்சி முதலாக நானிலத்துப் பாணியும் (௨௫௧) ஓர்த்து உறங்காததேவியென்றது நானிலை அணிமையுங் கூறிற்று.

(௧௯௮) வடதிசைக்கண் தும்பைத்துறையையும் வாகைத்துறையையும் முடிவு செய்து (௨௫௧) தன்றேவி (௨௫௨) கைவளைசெறிய வலம்புரிமுழங்க (௨௫௩) வாகைச்சென்னியனாய் (௨௫௪) யானைமிசைப்பொலிந்து (௨௫௫) திருநகரெதிர் கொள்ளத் (௧௯௯) தானையொடு (௨௫௬) வஞ்சியிற் புகுந்தனனெனக் கூட்டுக.

## ௨௭.—நீர்ப்படைக்காதை முற்றிற்று.



1. "களிறுபல பூட்டி யொழுகை யுய்த்த" பதிற். ௪௪.

(பி - ம்.) * 'உண்ணிய தும்பை' † 'கிளவியந்தீம்' ‡ 'வஞ்சியிற்'

# இருபத்தெட்டாவது

# நடுகற் காதை.

தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை
மண்ணக * நிழற்செய மறவா ளேந்திய
[1] நிலந்தரு திருவி னெடியோன் † றனாது
வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூ
[2] ரொண்டொடித் தடக்கையி னொண்மலர்ப் பலிதூஉய்
[3] வெண்டிரி விளக்க மேந்திய மகளி
ருலக மன்னவன் வாழ்கென் றேத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
[4] போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
‡ வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்த
ரானை வெண்கோ டழுத்திய மார்பு
நீள்வேல் கிழித்த நெடும்புண் § ணகமு
மெய்கணை கிழித்த பகட்டெழி லகலமும்
வைவாள் கிழித்த மணிப்பூண் || மார்பமு
மைம்மல ருண்கண் மடந்தைய ரடங்காக்

---

௧. தமனிய நெடுங்குடை யென்றது காம்பும் முகப்பும் பொன்னாதலால்.

௨. மறம் - வீரம்.

---

1. "நிலந்தரு திருவி னெடியோய்" (பதிற். ௮௨); "நிலந்தரு திருவி னெடியோன்" மதுரை. ௭௬௩.

2. இ - அ. "அகநக ரெல்லா மரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப், பகன் மாய்ந்த மாலை" (சிலப். ௯: ௧-௩) என்பதையும் அதன் கீழ்க் குறிப்பையும் பார்க்க.

3. "கன்னியர் கைவிளக் கேந்தக் காவலன், பொன்னியல் வளநகர் பொலியத் தோன்றினார்" சூளா. சீய. ௨௪௪.

4. ௯-௧௦. "வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப், போந்தைக் கண்ணிநி னூங்கணோர்" சிலப். ௨௬: ௧௯௩-௪.

(பி - ம்.) * 'நிழற்ற மறவாள்' † 'முனது' ‡ 'வேய்ந்துவினை' § 'அகமும்' || 'புய லைம்மலர்'

[1] கொம்மை வரிமுலை வெம்மை * வேதுறீஇ
† [2] யகிலுண விரித்த வம்மென் கூந்தன்
முகிலுழை மதியத்து ‡ முரிகருஞ் சிலைக்கீழ்
மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து
சிதரரி பரந்த § செழுங்கடைத் தூது
மருந்து மாயதிம் மாலையென் ‖ றேத்த
விருங்கனித் துவர்வா யிளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழுங் காமர் செவ்வியிற்
றிருந்தெயி றரும்பிய விருந்தின் மூரலு
மாந்தளிர் மேனி ¶ மடவோர் தம்மா
லேந்துபூண் ** மார்பி னிளையோர்க் களித்துக்
காசறைத் திலகக் கருங்கறை கிடந்த
மாசில்வாண் முகத்து வண்டொடு சுருண்ட
[3] குழலுங் கோதையுங் கோலமுங் காண்மார்
[4] நிழல்கான் மண்டிலந் தம்மெதி ரிறுத்தி
வணர்கோட்டுச் சீறியாழ் †† வாங்குபு தழீஇப்
புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்
குரல்குர லாக வருமுறைப் ‡‡ பாலையிற்

(கசு) உறீஇ (உக) ஏத்தவென்னுமெச்சம், (உச) அரும்பியவென்னும் பெயரெச்சத் தொழிலோடு முடிந்தன.

(௩) நெடியோன் (ச) மூதூரில் (அ) வந்த மாலை, (௯) தெரியல் (க0) வேந்து வாள்வலத்தர் (கக - ச) மார்பை (கரு) மடந்தையர்தம் (கசு) முலையால் வேதுகொண்டு இவருடைய (உ0) கட்கடையாகிய தூது (உக) முன் பாசறைக்கண் நமக்கு வருத்தஞ் செயததேயன்றி இம்மாலைக்கண் அதற்கு மருந்துமாகியதென்று (உசு) இளையர் (உக) ஏத்த (உச) அரும்பியமூரலையும் (உசு) அவ்விளையோர்க்கு (உரு) அம்மடவோராலே (உசு) அளிப்பதுஞ் செய்தென்க.

1. "கொம்மை வருமுலை வெம்மையிற்றடைஇ" (நெடுநல். கசுக); "தங்குகண் வேல்செய்த புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியுஞ், செங்கனி வாய்மருந் தூட்டுவீர் செம்பொனெடுங்கடை திறமினோ" கலிங்க. கடை. கரு.

2. "அகிலுண விரித்த வம்மென் கூந்தலின்" சிறுபாண். உசுக.

3. உக - ௩0. "மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமுந், தேசு மொளியுந் திகழ நோக்கி" பரி. கஉ.

4. "நிழல்கான் மண்டில நோக்கி யழல்புனை, யவிரிழை திருத்து வாள்" (பரி-உக); "நிழல்கான்மண்டிலத்து" அகநா. எக.

(பி - ம்) * 'வெய்துறீஇ' † 'அகிலுணவிருந்த' ‡ 'முரிவெஞ்சிலை' § 'செங்கடைத்தூது' ‖ 'ஏத்தி' ¶ 'மடவோர்தத்தமேந்து' ** 'மார்பினிளையோர்க்கு' †† 'வாங்குபுடைத்தழீஇப்புரிபுரி' ‡‡ 'பாலைதுத்தங்குரலாத்றென்முறையிய்கி யத்தில்'

முத்தங் குரலாத் தொன்முறை யியற்கையி
னந்தீங் குறிஞ்சி யகவன் * மகளிரின்
மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து
முடிபுற முரிஞ்சுங் கழற்காற் † குட்டுவன்
குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல
வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்
பலர்புகழ் ‡ மூதூர்க்குக் காட்டி நீங்க
மைந்தரு மகளிரும் வழிமொழி கேட்ப
வைங்கணை நெடுவே ளரசுவீற் றிருந்த
வெண்ணிலா முன்றிலும் வீழ்பூஞ் சேக்கையு
மண்ணீட் டரங்கமு மலர்ப்பூம் பந்தரும்
[1] வெண்கா லமளியும் விதானவே திகைகளுந்
தண்கதிர் மதியந் தான்கடி கொள்ளப்
படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்
திடைநின் றோங்கிய நெடுநிலை மேருவிற்
கொடிமதின் மூதூர் நடுநின் றோங்கிய
[2] தமனிய மாளிகைப் புனைமணி யரங்கின்
வதுவை வேண்மாண் மங்கல மடந்தை
மதியேர் வண்ணங் காணிய வருவழி

(௩0) பிறத்திக் (௩௧) தந்தீஇயெனவு மெச்சங்கள், (௩௫) அகவன்மகளி ரென்னும் பெயரில் அகவுதற்றொழிலோடு முடிந்தன.

(௨௯) போகத்தாற் குலைந்த குழல் முதலியன திருத்திக் காணவேண்டிக் (௩0) கண்ணாடிபார்த்து (௩௧) யாழைத்தடீஇக் (௩௫) குறிஞ்சியை அகவுதலைச் செய்யும் மகளிராலே (௩௬) மைந்தர்க்கு விருந்தயர்ந்தென்க

(அ) பலர்தொழ வந்த மலரவிழ் மாலை, (உ௬) இளையோர்க்கு (௨௫) மடவோராலே (௨௪) மூரலையும் (௨௯) அளித்தது (௩௬) மைந்தர்க்கு (௩௫) அகவன் மகளிராலே (௩௬) விருந்துமயர்ந்து (௪0) மூதூரிடத்து (௩௯) மதியத்தைக் (௪0) காட்டி நீங்க, அந்தமதியம் (௪௩) வெண்ணிலாமுன்றில் முதலானவற்றை (௪௬) விளக்காநிற்க (௫௨) அம்மதியத்தெழுச்சியை (௫௧) வேண்மாள் (௫௨) காண்டற்கு வருவழி (௫0) அரங்கின்...... பெற்றன ஒருபக்கமெனக.

1. "விதானித்துப் படுத்த வெண்கா லமளி" பெரும். ௧ ௩௩: ௬௩.

2. ௫0 - ௫௧. "விளங்கில வந்தி வெள்ளி மாடத், திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளி" சிலப். ௨௫: ௪ - ௫.

(பி - ம்.) * 'மகளிர், மைந்தர்க் கோக்கிய வருவிருந்தயரமுடி' † 'குடவன்' ‡ 'மூதூர்காட்டியாங்கு'

யெல்வளை மகளி ரேந்திய * விளக்கம்
பல்லாண் டேத்தப் பரந்தன வொருசார்
மண்கணை முழவும் வணர்கோட் டியாழும்
பண் † கனி பாடலும் பரந்தன வொருசார்
மான்மதச் சாந்தும் வரிவெண் ‡ சாந்துங்
[2] கூனுங் குறளுங் கொண்டன வொருசார்
வண்ணமுஞ் சுண்ணமு § மலர்ப்பூம் பிணையலும்
[3] பெண்ணணிப் பேடிய ரேந்தின ரொருசார்
[4] பூவும் புகையு மேவிய விரையுந்
தூவியஞ் சேக்கை சூழ்ந்தன வொருசா
ராடியு மாடையு மணிதரு கலன்களுஞ்
சேடியர் ¶ செவ்வியி னேந்தின ரொருசா
ராங்கவ டன்னுட னணிமணி யாங்கம்
[5] வீங்குநீர் ஞால மாள்வோ னேறித்
[1] திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
** பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவுஞ்

---

கரு மணியாங்கம் - நிலாமுற்றம்.

---

[1]. "பஞ்சிலங்கு மல்குலார் பலாண்டுகூற" "தழலக்கைக் காதைநல்லார் பலாண் டிசை ததும்பவாழ்த்த", "பங்கயமுகத்தவர்பலாண்டிசைபராவ" சூளா. அரசு. கூ௫; கல்யாண. கசக, உசுஎ.

[2]. சிலப். உஎ: உகச - ஆம் அடியையும் அதன் கீழ்க் குறிப்பையும் பார்க்க.

[3]. "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" நாலடி. உ௫க.

[4]. மு. "பூவும் புகையு மேவிய விரையும்" சிலப். ௫: கச; கஉ: கஅ; ௬o: க௫க.

[5]. "வீங்குநீர் ஞால மாள்வோன்" (சிலப். உசு: கo௫, கஎ௬); "வீங்குநீர்ஞால மாள்வோய்" சிலப். உசு. க௫௫; மணி. ௫: ௬க.

[1]. சுஎ - எ௫. "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப, வுமையவ ளொருதிற னாக வோங்கிய, விமையவ னாடிய கொடுகொட்டி யாடலும்" (சிலப். சு: சo-சக); "கொட்டி கொடுவிடையோ னாடிற் றதற்குறுப், பொட்டிய நான்கா மெனல்" (ஷை ௬: கச-மேற்): "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ, கொடுகொட்டி யாடுங்கால்.........கொண்டசீர் தருவாளோ" (கலி. கடவுள்); "கொட்டி யாடற் கேற்ற மொட்டிய, வுமையவ ளொருபா லாக வொருபா, லிமையா நாட்டத் திறைவ னாகி, யமையா வுட்கும் வியப்பும் விழைவும், பொலிவும் பொருந்த நோக்கித் தொக்க, வவுண ரின்னுயி ரிழப்ப வக்களம், பொலிய வாடின னென்ப" ஷை. ஷை - மேற்.

(பி - ம்.) * 'விளக்கமொடு பல்யாண் டேத்தப் பரந்தனர்' † 'கனிப்பாடலும்' ‡ 'கலவையுங்' § 'மலர்ப்பூம்' ‖ 'சேக்கைத்தந்தனர்' ¶ 'செல்வியின்' ** 'புரிதரு'

செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை * யசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னாக வோங்கிய
விமையவ னாடிய † கொட்டிச சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
[2] ‡ கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்தவ
னேத்தி நீங்க விருநில மாளவோன்
§ வேத்தியன் மண்டப மேவிய பின்னர்
நீலன் முதலிய கஞ்சுக மாக்கண்
மாடல மறையோன் றன்னொடுந் தோன்றி
வாயி லாளரின் மன்னவற கிசைத்தபின்
கோயின் மாக்களிற் கொற்றவற் றொழுது
தும்பை வெம் || போர்ச் சூழ்கழல் வேந்தே
செம்பியன் மூதூர்ச் சென்றுபுக் காங்கு
[3] வச்சிர மவந்தி மகதமொடு ¶ குழீஇய
சித்திர மண்டபத் திருக்க வேந்த
னமரகத் துடைந்த வாரிய மன்னரொடு
தமரிற் சென்று தகையடி வணங்க

எ௫. கொட்டிச்சேதம் - கொடுகொட்டிக் கூத்து.

எ௬-௭. இதனை, பருத்தலரிய நான்மறையோரது பறையூரிற் கூத்தச் சாக்கையன் ஆடுதலின் மகிழ்ந்தென்க

எ௯. வேத்தியன் மண்டபம் - அரசிருப்பாய பேரோலக்கமண்டபம்.

௮௬-௭. வச்சிரம் அவந்தி மகதமொடுதிரண்ட மண்டபம் - இந்நாடு மூன்றுமுடையோர் திறையிட்ட பந்தர் தோரணவாயில் பட்டிமண்டபம், இவைகூடியமண்டபம்;......ஆகலான், ஆகுபெயர்; பிறந்தவழிக்கூறல்.

௮௯ தமரிற்சென்று - சங்கோசபரிவாரத்துக்குக் கடவாருடன் சென்று.

1. "எண்டிக் களந்துகொண்டனவென்னப், புரிந்த செஞ்சடை திமிர்ந்து சுழல" கலி. உழைதின்றிரும்"—

2. சாக்கையரென்னு மொருவகைச்சாதியார் இப்பொழுதும் கூத்துநிகழ்த்தும் தொழிலையுடையராய் மலைநாட்டிலுள்ளாரென்று தெரிகின்றது.

3. ௮௬ - ௭. "வச்சிரநன்னாட்டுக், கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரு, மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன், பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமு, மவந்தி வேந்தனுவந்தனன் கொடுத்த, நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்" சிலப். ௫: ௯௯-௧0௪

(பி - ம்.) * 'இயங்காது' † 'கொடுகொட்டிச்சேதம்' ‡ 'கூத்தைச்சாக்கையோ னாடலின்' § 'வேத்தியன் மண்டபமேறிய' || 'போர்சூழ்' ¶ 'குழீஇச்சித்திர'

நீளம ரழுவத்து நெடும்பே ராண்மையொடு
வாளுங் குடையு மறக்களத் * தொழித்துக்
[1] கொல்லாக் கோலத் துயிருய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்றெனத்
தலைத்தேர்த் தானைத் தலைவற் குரைத்தனன்
சிலைத்தா ரகலத்துச் செம்பியர் பெருந்தகை
யாங்குநின் றகன்றபி னறக்கோல் வேந்தே
யோங்குசீர் மதுரை மன்னவற் காண
† வாரிய மன்ன ரமர்க்களத் தெடுத்த
[2] சீரியல் வெண்குடைக் ‡ காம்புநனி சிறந்த
[3] சயந்தன் வடிவிற் றலைக்கோ லாங்குக்
கயந்தலை யானையிற் § கவிகையிற் காட்டி
யிமையச் சிமையத் திருங் || [4] குயி லாலுவத்
துமையொரு பாகத் தொருவனை வணங்கி
[5] யமர்க்கள ¶ மரசன தாகத் துறந்து
[6] தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேற்

௯௩. போரிடத்துப் பிடித்துக்கோடல். ௯௭. காண - கண்டவளவிலே.

௨0௨. குயிலாலுவம் - இமவான்பக்கத்து ஒருபகுதி.

(௯௮) ஆரியமன்னரென்னுந் தொகுதி யொற்றுமைபற்றிக் (௨0௧)காட்டி (௨0௩) வணங்கிக் (௨0௫) கொண்டோரெனச் சிலர்வினை வேறுசிலர்வினையொடு முடிந்தது.

[1], "சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர், பிடகைப்பீலிப் பெருநோன்பாளர்", "தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த, மாபெருந் தானை மன்னகுமரர்", "தவப் பெருங்கோலங்கொண்டோர்" சிலப். ௨௬: ௨௨௫ - ௬; ௨௭: ௧௭௯-௮0; ௨௮: ௨0௫.

[2]. ௯௮ - ௯. "பேரிசைமன்னர் பெயர்புறத் தெடுத்த, சீரியல் வெண்குடைக் காம்புநனிகொண்டு" சிலப். ௩: ௧௧௪ - ௫.

[3]. "தெய்வ மால்வரைத் திருமுனியருள, வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு, தலைக்கோற் றனத்துச்சாபம்", "மன்னவன் கோயில், இந்திர சிறுவன் சயந்தனாகென" சிலப். ௩: ௧-௩; ௧௧௬.

[4]. நீலகேசி. மொக்கலவாதச்சருக்கம் ௧௬0 - ஆம் பாட்டுரையில், 'குயிலாலபுரம்' என்று ஓரிடப்பெயர் காணப்படுகின்றது.

[5]. "தேன்மிடைந்த தாரினான் செங்களஞ் சிறந்தது" (சீவக. ௨௭௧) என்பதையும், "இத்துணையும் இவன் வெற்றியாதலின் இவன் களம் என்றார்" என்னும் அதன் விசேடவுரையையும், "ஒன்றி விரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால், வென்று களங்கொண்ட வேல்வேந்தே" பு-வெ. ௯: ௧௭.) என்பதையும்பார்க்க.

[6]. இக்காதையின் ௯௨ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.) * 'ஒளித்து' † 'ஆரியமாக்களமர்' ‡ 'காம்பினிற்சிறந்த' § 'கவிகை காட்ட' || 'கயிலாயத்து' ¶ 'அரசாளுகைத்துறந்து'

கொதியழற் சீற்றங் கொண்டோன் கொற்றம்
புதுவ தென்றனன் போர்வேற் செழியனென்
றேனை மன்ன ரிருவருங் கூறிய
நீண்மொழி யெல்லா நீலன் கூறத்
தாமரைச் செங்கண் டழனிறங் கொள்ளக்
கோமக னகுதலுங் குறையாக் கேள்வி
மாடல னெழுந்து மன்னவர் மன்னே
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென் றேத்திக்
கறிவளர் சிலம்பிற் றுஞ்சும் யானையிற்
சிறுகுர னெய்தல் * வியலூ ரெறிந்தபி
[1] ன்னார்புனை தெரிய லொன்பது மன்னரை
நேரி வாயி னிலைச்செரு வென்று
நெடுந்தேர்த் தானையொ † டிடும்பிற்புறத் திறுத்துக்
கொடும்போர் கடந்து [2] நெடுங்கட லோட்டி
யுடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக்
கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்
நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே

கூஅ - கயஎ. ஆரியமன்னர் அமர்க்களத்தில் தங்களுக்கெடுத்த குடையிற் காம்பைக் கையிலே பிடித்து ஆனைக்கழுத்திலிருத்திய ஆசிரியன் கையில் தலைக்கோலாகக் காட்டியும், குயிலாலுவமென்னும்.............. அமர்க்களம் அரசனதாகத் துறந்தும், தவப்பெருங்கோலங் கொண்டாராயினும் தம்மேற் சீற்றங்கொண்டோன் கொற்றம் புதிதென்றனன்

ககச - ரு யானையினையுடைய வியலூர்.

ககஎ. நேரிவாயில் - உறையூர்த் தெற்கில்வாயிலதோரூர்.

கஉ0 ஆரியமன்னரொனறது-முனனொருகால் இவனுக்குத் தோற்றார்சிலர்.

[1]. ககசு - எ. "நின் மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா, வொத்த பண்பின ரொன்பது மன்னர், இளவரசு பொறாஅ ரேவல் கேளார், வளநா டழிக்கு மாண்பின ராதலி, னொன்பது குடையு மொருபக லொழித்தவன், பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்" சிலப். உஎ: ககஎ - உக.

[2]. ககசு - உக. "மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு, பொங்கிரும்பரப்பிற் கடல்பிறக் கோட்டிக், கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய, செங்குட்டுவன்" (சிலப். கூ0. கட்டுரை, கக - ௫); "கோடுநரல் பௌவங் கலங்க வேலிட், டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய, வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்", "கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக், கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ" (பதிற். சசு, சஅ); "மட்டவிழ்தெரியன் மறப்போர்க் குட்டுவன்......செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி யோங்குதிரைப் பௌவ நீங்க வோட்டிய, நீர்மாணெஃக நிறத்துச் சென்றழுந்த" (அகநா. உஙஉ); புறநா: கூசு - ஆம்பாட்டிலும் இக்கருத்து வந்துள்ளது.

(பி - ம்.) * 'வீயலூர்' † 'இடும்பியாற்றிலிறுத்துக்கடம்போர்'

புரையோர் * தம்மொடு பொருந்த வுணர்ந்த
வரைசரேறே யமைகநின் சீற்ற
மண்ணாள் வேந்தே † நின்[1] வாணாட்க
[2] டண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க
வகழ்கடன் ஞால மாள்வோய் வாழி
யிகழா தென்சொற் கேட்டல் வேண்டும்
வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னு
மறக்கள வேள்வி செய்யா தியாங்கணு
மறக்கள வேள்வி செய்வோ யாயினை
[3] வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிநின் ‡ னூங்கணோர் மருங்கிற்
[4] கடற்கடம் பெறிந்த காவல னாயினும்
விடர்ச்சிலை பொறித்த விறலோ னாயினு
[5] நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் § விடுத்தோ னாயினும்
போற்றி மன்னுயிர் ‖ முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவ னாயினும்
[6] வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினு

௧௨௩. புரையோர் - உயர்ந்தோர்.

[1]. "நீ, நீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர், வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக், கடுவளி தொகுப்ப வீண்டிய, வடுவா ழெக்கர் மணலினும் பலவே" புறநா. ௫௫.

[2]. ஆன்பொருநை—சேரநாட்டிலுள்ள தொருநதி; இஃது ஆன்பொருந்தமெனவும் வழங்கும்; "வாழிவருபுனலிரான்பொருநை சூழ்தரும் வஞ்சியார் கோமான்" சிலப். ௨௯: "மலையரையன்"—பதிற்றுப்பத்தில் ௫௦ - ஆம் செய்யுளின் உரையைப் பார்க்க; "தண்ணான்பொருனை மணலினும் பலவே" (அகநா. ௯௩.); "தண்பொருனைப்; புனல்பாயும், விண்பொருபுகழ் விறல்வஞ்சி", "தண்ணான் பொருனை வெண்மணல்", "வஞ்சிப் புறமதி லலைக்குங் கல்லென் பொருனை" (புறநா. ௧௧. ௩௬, ௩௮௭) "ஆன் பொருனையும் வையையும் போலும் யாற்றிலும்" தொல் - கற்பு. சூ. ௫௦ - ந.

[3]. ௧௩௩ - ௪. சிலப்பதிகாரம், ௨அ: ௯ - ௧௦.

[4]. சிலப்பதிகாரம் ௨௩: அக - ௨; ௨௫: ௧ - ௨ ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க; "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை, விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" மணி. ௨அ: ௧0௩ - ௪.

[5]. சிலப்பதிகாரம், ௨௯: ௯௧ - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

[6]. "வன்சொல் யவனர்வளநாடு வன்பெருங்கல், றென்குமரியாண்ட" சிலப். ௨௯.

(பி - ம்.) * 'தம்மொழி பொருந்தா துணர்ந்த' † 'நீநின்வாழ்நாடன்னார் பொருளே' ‡ 'ஊங்கணார் மருங்கும்' § 'கொடுத்தோன்' ‖ 'முறைமையிற்'

* மிகப்பெருந் தானையோ டிருஞ்செரு வோட்டி
[1] யகப்பா வெறிந்த வருந்திற லாயினு
முருகெழு மரபி [2] னயிரை மண்ணி
யிருகட னீரு மாடினோ னாயினுஞ்
சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினு
மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் † மருங்கிற்
செல்வ நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமி ழிகழ்ந்த வாரிய மன்னரிற்
கண்டனை யல்லையோ காவல் வேந்தே
யிளமை நில்லா தென்பதை யெடுத்தீங்
‡ குணர்வுடை மாக்க ளுரைக்கல் வேண்டா
திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவி னெய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் § மறிக்கினு மறிக்கு
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்
விலங்கின் யாக்கை ¶ விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணு
[3] மாடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது

கசரு. அயிரை - ஓர்யாறு. அதிலே குளித்து.
கசஎ. சதுக்கப்பூதர் - அமராபதியிற் பூதங்கள்.
கசகூ. மீக்கூற்றாளர் - மேற்பட்ட வார்த்தையையுடையவர்கள்.

[1]. "அண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த, பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ" (பதிற். உஉ); "அகப்பா வெறிந்து பகற்றீவேட்டு" ஷ ங-ஆம்பத்துப்பதிகம்.

[2]. அயிரையை ஒருமலையென்றுங் கூறுவர்; "இருகட னீரு மொருபக லாடி, யயிரை பரைஇ" (பதிற். ங-ஆம் பத்துப் பதிகம்); "கடவு ளயிரையி னிலைஇ" "உருகெழு மரபி னயிரை பரைஇ,", "உருகெழு மரபி னயிரை பரவி" ஷ. எகூ, அஅ, கூ௦.

[3]. ௬கூ - கூ. "ஆடுகூத்த ரணிபோல, வேற்றோ ரணியொடு வந்திரோவென' மணி. ௨௨: ௬௨ - ௨.

(பி - ம்.) * 'மிகற்பெரும்' † 'மருங்கு' ‡ 'உரனுடைமாக்களுரைக்கவேண்டா' § 'மறிக்கனுமறிக்கும்', 'இவ்வுயிர்மிக்கோர்' ¶ 'எய்துமிவ்வுயிர்'

[1] செய்வினை * வழித்தா யுயிர்செலு மென்பது
[2] பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலி
[3] னெழுமுடி மார்பநீ யேந்திய திகிரி
வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே
யரும்பொருட் † பரிசிலே னல்லே னியானும
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை யுலகத் [4] துயிர்போகு பொதுநெறி
புலவரை யிறந்தோய் போகுதல் ‡ பொறேஎன்
வானவா போற்றும் வழிநினக் களிக்கு
நான்மறை § மருங்கின் வேள்விப் பார்ப்பா
னருமறை மருங்கி னரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டு

கசுஅ. பொருளுரை - மெய்யுரை

கசுகூ. எழுமுடி - எழுமுடியாற் செய்த ஆரம்.

களக. பொருள் பரிசிலாக வருவேனல்லேன்; அதுகாரணமாகச் சொல்லலுற்றேனல்லேன.

களங. பொதுநெறி - பிறந்திறப்போரெல்லாரும் போம்வழி.

களச. [5] புலவரையிறந்தோய - அறிவெல்லை கடந்தோய.

களரு வானவர் போற்றும்வழி - மோட்சமார்க்கம்.

(களரு) அளிக்கும் (களசு) வேள்விப்பார்ப்பானென்க.

களஅ. வேள்வி - இராசசூயம்

1. கசுஎ - அ, "ஐய முண்டோ வாருயிர் போனுந், செய்வினை மருங்கிற் சென்று பிறப் பெய்துதல்" மணி. கூ: கஙஅ - கூ.

2. "பொய்யில் புலவன் பொருளுரை" மணி. உஉ: கூக.

3. "எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து, நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை", "எழுமுடி கெழீஇய திருமஞெம ரகலத்துப், புரையோர்", "எழுமுடி மார்பி னெய்திய சேரல்" (பதிற். கச, கசு - சஙு.) என்பவற்றாலும், 'எழுமுடியென்பது, அரசரைவென்று அவர்கள் எழுமுடியாலுஞ் செய்ததோராரமாம்' (பதிற். கச - உரை) என்பதனாலுமுணர்க.

4. "உயிர்வழங்கு பெருநெறி" மணி. கஉ: கூஉ.

5. "புலவரை யிறந்த புகார்" மணி. ௬: கoகூ.

(பி - ம்.) * 'வழியே, வழிவழிசிறக்கவாய்வாள்' † 'பரிசிலல்லேன் யானும் பெரும்பெயர்' ‡ 'போற்றேன்' § 'மரபின் வேள்வி' || 'அருமறை மரபினரசர்க் கோங்கிய

[1] காளைச் செய்குவ * மறமெனி னின்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கு
மிதுவென வரைந்து வாழ்நா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
வேள்விக் கிழத்தி யிவளொடுங் கூடித்
[2] தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற
[3] ஊழியோ டூழி யுலகங் காத்து
† நீடுவா ழியரோ நெடுந்தகை யென்று
மறையோன் மறைநா ‡ வுழுது வான்பொரு
ளிறையோன் செவிசெறு வாக வித்தலின்
வித்திய பெரும்பதம் விளைந்துபத மிகுத்துத்
துய்த்தல் வேட்கையிற் சூழ்கழல் வேந்த
னுண்மறை மரபி னயந்தெரி நாவிற்
கேள்வி முடித்த வேள்வி மாக்களை
மாடல மறையோன் சொல்லிய முறைமையின்
§ வேள்விச் சாந்தியின் விழாக்கொள வேவி
யாரிய || வரசரை யருஞ்சிறை நீக்கிப்
[4] பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ் ¶ நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்
** வேளா விக்கோ மாளிகை காட்டி
†† நன்பெரு வேள்வி ‡‡ முடித்ததற் பின்னாட்

...........ஆரியமன்னரைக்காட்டி விடுதலீருய.......

கஅ௦. கேள்வியளவேயான நல்லுயிர்.

கஅ௨. உலகில் ஓரிடத்திலுமில்லை.

கஅ௩. வேள்விக்கிழத்தி - வேண்மாள். கஅகூ பதம் - உணவு.

ககஅ. வேளாவிக்கோமாளிகை - வேள் ஆவிக்கோமந்திரம்.

1. 'காலைச்செய் வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச், சாலச்செய் வாரே தலைப்படுவார் - மாலைக், கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொ, லறங்காலைச் செய்யாத வாறு" அறநெறி. கஎ.

2. "தாழ்கழன் மன்னர் தன்னடி போற்ற" சிலப். ௩௦: ககூக.

3. சிலப்பதிகாரம், ௩௦: கசரு - கூ.

4. ககூகூ - அ. புறநானூறு, கக - அவதாரிகை

(பி - ம்.) * 'அறனென் றெண்ணாற், கேள்வி யின்னுயிர் நீங்கென நீங்கும்' † 'நீவா ழியரோ' ‡ 'உழுதவான்' 'வேட்கைச சாந்தியின் விழாக்கோள் செய்கென' || 'அரச ரருஞ்சிறை' ¶ 'நீர்க் கேணி' ** 'வேள்விக் கான மாளிகை கட்டி' †† 'தம்பெரு' ‡‡ 'முடித்தபின்னாட்'

டம்பெரு நெடுநகர்ச் சார்வதுஞ் * சொல்லியம்
மன்னவர்க் கேற்பன செய்க நீயென
வில்லவன் கோதையை விருப்புட னேவிச்
[1] சிறையோர் கோட்டஞ் † சீமின் யாங்கணுங்
கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மென
[2] வழும்பில் வேளோ டாயக் கணக்கரை
முழங்குநீர் வேலி மூதூ ரேவி
[3] யருந்திற ‡ லரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்
பண்டையோ ருரைத்த § தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேத்தும் பத்தினி யாகலி
னார்புனை சென்னி யரசற் களித்துச்
[4] செங்கோல் வளைய வுயிர்வா ழாமை
தென்புலங் காவல் மன்னவற் களித்து
வஞ்சினம் வாய்த்தபி னல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்த || ரென்பதை
வடதிசை மருங்கின் மன்னவ ரறியக்
குடதிசை ¶ வாழுங் கொற்றவற் களித்து
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
[5] கொதியழற் சீற்றங் கொங்கையின் ** விளைத்து
நன்னா டணைந்து †† நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழற் பொருந்திய நங்கையை
யறக்களத் தந்தண ராசான் பெருங்கணி

(௧௯௪) விழாக்கொளவேவி (௨௦௨) வில்லவன்கோதையையேவியென்க.

௨௦௫ - ௬. அழும்பில்வேள்...... ..மூதூர்களிலே இப்படிச்செய்யுமென்று ஏவியென்க. ௨௨௨. ஆசான் - புரோகிதன்.

[1]. "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்" (சிலப். ௨௩; ௧௨௬ - ௭); "கறையோ ரில்லாச் சிறையோர் கோட்டம்" (மணி. ௧௯: ௧௬௧) "தம்பியை முகத்து நோக்கி, பூர்பிணிக்கோட்டஞ் சீப்பித் திருநவ ஞண்ட நாட்டைப், பார்பிணிகறையினீங்கப் படாமுரசறைவியென்றான்" சீவக. ௨௧௭௨.

[2]. சிலப். ௨௫: ௧௭௭; "விளங்குபெருந் திருவின் மான விறல்வே, ளழும்பில்" மதுரை. ௧௩௪-௫.

[3]. மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன் காவ லின்றெனி னின்றால்" மணி: ௨௨: ௨௦௮ - ௯; குறள், ௫௬௧ - பரிமேல். விசேடவுரையைப்பார்க்க.

[4]. "செங்கோல் வளைய வுயிர்வாழார் பாண்டியர்" சிலப். ௨௯.

[5]. சிலப்பதிகாரம், பதிகம், ௪௪.

(பி - ம்.) * 'சொல்லி மன்னியற் கொப்பன செய்க நீரென' † 'சீமி னெங்கணுங் கறைகெழு நல்லூர்க்' ‡ 'அரசன்' § 'தண்டா நல்லுரைப்' || 'என்பது' ¶ 'ஆளும்' ** 'வீழ்த்து' †† 'நளிநினை'

சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழையு நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்
திமையவ ருறையு மிமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் * தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய [1] தெய்வப் படிமத்து
[2] வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை † நன்கல முழுவதும் பூட்டிப்
[3] பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி
[4] வேள்வியும் விழாவு நாடொறும் வகுத்துக்
[5] கடவுண் மங்கலஞ் செய்கென வேவினன்
[6] வடதிசை வணக்கிய மன்னவ ரேறென்.

உ௮.—நடுகற்காதை முற்றிற்று.



---

௨௨௪. நூனெறிமாக்கள் - ‡ தபதிகள்.

(௨௨௪) இவர் (௨௨௨ - ௩) அங்கணர் முதலாயினாரோடு சென்று (௨௨௫) வகுத்த பத்தினிக்கோயிலில் (௨௨௮) கைத்தொழின் மிகுத்த படிமத்திலே (௨௩௦) ஆபரணங்கள் பூட்டி.

௨௩௧. பூப்பலி - அருச்சனை. காப்பு - திக்கிற்றேவதைகள்; கடைநிறுத்தி - கடைவாயினிறுத்தி.

௨௩௨. வேள்வி - ஓமம். விழா - உற்சவம்.

௨௩௩. கடவுள் மங்கலம் - பிரதிட்டை.

......(௨௨௧) நங்கையைப் (௨௨௫) பத்தினிக்கோட்டத்துத்(௨௨௮) தெய்வப்படிமத்திலே (௨௩௩) கடவுள்மங்கலம் செயகெனவேவினனென்க.

1. கடவு ளெழுதிய படிமங் காணிய, வேட்கை" மணி. ௨௧: ௬-௭.

2. வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரம்"மணி. ௩: ௧௨௭-௮; ௧௯:௫-௬.

3. சிலப்பதிகாரம், ௨௪: ௧௬-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; "கலம்பகர் பிடிகைப் பூப்பலி கடைகொள" மணி. ௭: ௧௨௨.

4. "விழவொலியும் வேள்வொலியு மாறான் கண்டாய்" (தேவாரம், நா. மழபாடி.) "சாறும் வேள்வியுந் தலைமயங்குமே" கம்ப. நாடு. ௫௬.

5. "கடவுண் மங்கலஞ் செய்த பின்னாள்" சிலப். ௨௯. உரைப்பாட்டுமடை.

6. வடதிசை வணக்கிய வானவர் பெருந்தகை" சிலப். ௩௦: ௧.

(பி - ம்.) * 'தெய்வம் பாச்சக், கைவினை......படிவத்து' † 'நன்கலன் முழுவதும்' ‡ 'சம்பத்திகள்'

# இருபத்தொன்பதாவது

# வாழ்த்துக்காதை.

## உரைப்பாட்டுமடை.

குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத் திகழொளிஞாயிற்றுச் சோழன்மக ளீன்றமைந்தன் கொங்கர்செங் களம்வேட்டுக் [1] * கங்கைப்பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன் சினஞ்செருக்கி வஞ்சியுள்வந் திருந்தகாலை வடவாரிய மன்னராங்கோர் மடவரலை மாலைசூட்டி யுடனுறைந்த விருக்கைதன்னி லொன்று †மொழிநகையினராய்த் தென்றமிழ்நாடாளும்வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து மின்றவழு மிமயநெற்றியில் விளங்குவிற் புலி கயல்பொறித்தநா ளெம்போலு முடி ‡ மன்னரிங் கில்லைபோலு மென்றவார்த்தை யங்குவாழுமாதவர்வந் தறிவுறுத்த விடத்தாங்க ணுருள்கின்ற மணிவட்டைக் குணில்கொண்டு துரந்ததுபோ லிமய மால்வரைக் கற்கடவுளா மென்றவார்த்தை யிடந்துரப்ப வாரியநாட்

குமரியினும் வடவிமயத்தினு மெனவே இடைசொல்லவேண்டாவாயிற்று.

ஒருமொழி - தன் ஆணையினை.

ஞாயிற்றுச்சோழன் - சூரியவங்கிசத்துச் சோழன்.

சோழன்மகள் மைந்தனாகிய செங்குட்டுவன்.

சினஞ்செருக்கி - ஆரியமன்னரிடத்தே சினத்தைமிகுத்து.

அதனைவிட்டு வஞ்சியிலே வந்திருந்த காலை.

ஒன்றுமொழி நகையினராய் - தம்மில் ஒத்தவார்த்தையுடனே சிரிப்பினராய்.

இடந்துரப்ப - இடத்தினின்றும் துரப்ப.

1. "ஆரியர் துவன்றிய பேரிசை யிமயந், தென்னங் குமரியொ டாயிடை மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே", "வடதிசை யெல்லை யிமய மாகத், தென்னங் குமரியொ டாயிடை யரசர், முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழ......குட்டுவ" பதிற். ௧௧, ௪௧.

2. "கங்கைப் பேர்யாற்றுக்கரைபோகிய செங்குட்டுவன்" சிலப். ௧௦. கட்டுரை ௧௩ - ௪.

(பி - ம்.) * 'கங்கையாற்றுக்கரை' † 'மொழியுந்நகை' ‡ 'மன்னரில்லைபோலுமிங்கென்ற'

டாரசோட்டி யவர்முடித்தலை யணங்காகிய பேரிமயக் கற்சுமத்திப் பெயர்ந்துபோந்து நயந்தகொள்கையிற் கங்கைப்பேர் யாற்றிருந்து கங்கைதன்னை * நீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மைநீங்கி வஞ்சிமா நகர்புகுந்து நிலவரசர் நீண்முடியாற் பலர்தொழு † படிமங்காட்டித் தடமுலைப் பூசலாட்டியைக் [1] கடவுண்மங்கலஞ் செய்தபின்னாட் கண்ணகி தன்கோட்டத்து மன்னரசர் திறைகேட்புழி யலம்வந்த மதி ‡ முகத்திற் சிலசெங்கய னீருமிழப் பொடியாடிய கருமுகிறன் புறம் புதைப்ப வறம்பழித்துக் கோவலன் றன் வினையுருத்துக் குறுமகனாற் கொலையுண்ணக் காவலன்ற னிடஞ்சென்ற கண்ணகிதன் கண்ணீர் கண்டு மண்ணரசர் பெருந்தோன்ற லுண்ணீரற் றுயிரிழந்தமை மாமறையோன் வாய்க்கேட்டு [2] மாசாத்துவான் § றுன்றுறப்பவு மனைக்கிழத்தி யுயிரிழப்பவு மெனைப்பெருந் || துன்பமெய்திக் காவற் பெண்டு மடித்தோழியுங் கடவுட்சாத்த னுடனுறைந்த தேவந்தியு முடன்கூடிச் சேயிழையைக் காண்டுமென்று மதுரைமா நகர்புகுந்து முதிராமுலைப் பூசல் ¶ கேட்டாங் கடைக்கலமிழந் துயிரிழந்த விடைக் குலமக ளிடமெய்தி ** யையையவண் மகளோடும் வையையொரு வழிக்கொண்டு மாமலைமீ மிசையேறிக் கோமகடன் கோயில்புக்கு நங் கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டுவற்குத் திறமுரைப்பான் மன்.

அணங்கென்றார், சிலா தெய்வமாதலால்.

'வடவாரியர்' என்றதுமுதலாக, 'கடவுண்மங்கலஞ் செய்தபின்னாள்' என்பதிறுக முன்பு செய்ததனைக் கொண்டுகூறியதாக்கி யுரைக்க.

அறம்பழித்து - தன்மதேவதையை யிகழ்ந்து; [3] "அறனென்னு மடவோய்" என்றுவைதது. காவற்பெண்டு - செவிலித்தாய்.

முதிராமுலைப்பூசல் - ஊர்வெந்தபடி.

இஃது உரைப்பாட்டு; இதனை முன்னே மடுத்தலான் மடையாயிற்று.

[1]. சிலப்பதிகாரம், உ௫: உகக.

[2]. "சோவலன் றாதை மாதவம் புரிந்தோன்" மணி. உ௮: எக.

[3]. சிலப்பதிகாரம். ௧௯: "தறைமலி"

(பி - ம்.) * 'நீர்ப்படுத்துவெஞ்சினவேல் வேட்கைநீங்க' † 'படிவம்' ‡ 'முகத்துச்சில' § 'தான்றுறக்கவும்......இழக்கவும்' || 'துயரெய்தி......மடித்தோழியுங்' ¶ 'கண்டாங்கடைக்கல மிழந்துயிருலந்த' ** 'ஐயையிவண் மகளோடுவையை...

